# செந்தமிழ்ச் செல்வி

## உள்ளுறை



சிலம்பு-௪௯] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௩, சித்திரை (May '72) [பரல்-௬

## ‘செந்தமிழ்ச் செல்வி’

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

க. பேராசிரியர், முத்து இராசாக்கண்ணனுர் அவர்கள்,
எம்.ஏ., பி.ஓ.எல்.
இயக்குநர், தமிழகவரசு தமிழ் வளர்ச்சித் துறை, சென்னை 1.

உ. ,, ‘சித்தாந்த கலாநிதி’, உரைவேந்தர்,
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள்.
தமிழ்ப் பேராசிரியர், தியாகராசர் கல்லூரி, மதுரை.

ங. டாக்டர் ந. சஞ்சீவி, எம், ஏ., பி.எச்டி.,
தமிழ்த்துறைத்தலைவர், சென்னைப் பல்கலைக்கழகம்.

ச. செந்தமிழ்க் கலைமணி, வித்துவான்,
பண்டித, கா. பொ. இரத்தினம் அவர்கள்,
பி.ஏ. (ஆனர்சு) (லண்டன்) எம்.ஏ., பி.ஓ.எல். (சென்னை)
கொழும்பு.

ரு. திரு. கு. பரமசிவன் அவர்கள், எம்.ஏ., டிப். லிங்.,
தமிழ் விரிவுரையாளர், அமெரிக்கன் கல்லூரி, மதுரை.

சு. திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.,
நூலகர், மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை.

---

# டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் மறைமலையடிகள் கலைமன்றத்தைப் பார்த்தல்



கலைஞரவர்களைக் கலைமன்றத்துக்குள் அழைத்துச் செல்லுதல்



1938இல் திருவாரூரில் இந்தி எதிர்ப்பு மாணவர் ஊர்வலத்தில் தாம் ஏந்திச்சென்ற தமிழ்க் கொடியைக் கலைஞர் பார்த்து மகிழ்தல்



மாண்புமிகு அமைச்சர் சாதிக்பாட்சா, திரு. செ. கந்தப்பன்,
எம்.எல். ஏ . ஆகியோருடன் 'இந்தி எதிர்ப்பு இயக்கம்' பற்றிய
அறிக்கை கடிதங்களை உன்னிப்பாகப் பார்வையிடல்.



1937 அக்டோபரில் நெல்லையில் அறிஞர் அண்ணா
இந்தி எதிர்ப்புப்பற்றிப் பேசிய கூட்ட அறிக்கைகளைப் படித்தல்

செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

| சிலம்பு சசு | திருவள்ளுவர் ஆண்டு உ00ரு, சித்திரை மே 1972 | பரல் கூ |
|---|---|---|

# கலைமன்றத்தில் கலைஞர்

1972 ஏப்ரல் திங்கள் 27ஆம் நாள் வியாழக்கிழமை மாலை 6 மணிக்குக் குரோம்பேட்டை புதுக்குடியிருப்பில் பல்லவபுரம் குடிநீர்த்திட்டம் துவக்க விழாவுக்குப் போகிற வழியில் கழக ஆட்சியாளர் அழைப்பிற்கிணங்கி, மாலை 5-30 மணிக்கு மாண்புமிகு முதலமைச்சர் டாக்டர் கலைஞர் கருணாநிதியவர்களும், பொதுப்பணித்துறை அமைச்சர் மாண்புமிகு சாதிக் பாட்சா அவர்களும், குடிநீர் வாரியத் தலைவர் மதிப்புமிக்க செ. கந்தப்பன், எம்.ஏ., எம்.எல்.ஏ., அவர்களும் கவிஞர் கருணானந்தர் அவர்களும் பல்லவபுரம் சாவடித் தெருவில் தனித்தமிழ் வளர்த்த மறைத்திரு மறைமலையடிகள் வாழ்ந்த இல்லமாகிய கலைமன்றத்துக்கு வருகை புரிந்தனர்.

அவர்கள் தெருவாயிலில் வந்திறங்கியதும் அன்போடு வரவேற்று உள்ளே அழைத்துச் செல்லுகையில் முகப்பிலுள்ள தோட்டத்தின் இடப்புறம் புதிதாக அமைக்கப்பெற்றுள்ள சொற்பொழிவு மேடையினையும், வலப்புறமுள்ள வட்ட நீர் நிலையினையும் சுட்டிக் காட்டினேன். பின்பு கலைமன்றக் கட்டிடத்திற்குள் புகுந்ததும் வலப்புறச் சுவரில் பதிவு செய்யப் பெற்றிருந்த சலவைக்கல்லைக் காட்டி, இக்கட்டிடத்தை வாங்குதற்குத் திருமிகு சி. சுப்பிரமணியமவர்கள் தமிழக நிதியமைச்சராக விருந்தபோது யான் வேண்டியபடி நடுவணரசு வழி ரூ. 25,000மும் தமிழகவரசு வழி ரூ. 10,000மும் நன்கொடையாக வழங்கினார்கள் என்று பெருமிதத்தோடு கூறினேன்.

அங்கே நின்றவிடத்தில் தலைக்குமேல் நாற்புறச் சுவரின் நான்கு பக்கமும் பண்டிதர் நிலையிலும் துறவு நிலையிலும் அமைந்துள்ள அடிகளாரின் 12 திருவுருவப் படங்கள் தலைப்புறத்தை முன் சாய்த்துத் திருத்தமாகக் கவின்பெற நிறுத்தப் பெற்றிருந்தமை கலைஞர் அவர்கள் உள்ளத்தைப் பெரிதுங் கவர்ந்தது.

மேலும் சற்று உள்ளே புகவும் வலப்பக்கம் மேசை மேல் 2000 ஆண்டுகட்கு முற்பட்ட பழந்தமிழ் இலக்கணம் இலக்கியப் பேழை காட்சி யளித்தது. உள்புகும் வாயிலுக்கு மேல் சுவரில் அழகிய நிலைக்கடிகாரமும், அதன் இருமருங்கிலும் புலவர் பெருமக்கள் உருவப் படங்களும் அணிபெற நிறுத்தப் பெற்றிருப்பதைக் கண்டு மகிழ்வுற்றனர். வலப்பக்கத்தேயுள்ள மேசை, அதன் மேலுள்ள தள்ளு கதவுடைய ஓரடுக்குப் பேழை, நாற்காலி ஆகியவற்றைக் காட்டி அடிகளார் பகலில் இங்கமர்ந்துதான் நூலாராய்வார்கள்; நூல் எழுதுவார்கள் என்றும், புத்தகங்களை யெல்லாம் தம்கைப்பட மேலுறையிட்டு ஒழுங்குபெற அடுக்கி வைப்பார்கள் என்றும் கூறினேன். அதனைக் கேட்டுக் கலைஞரவர்கள் உள்ளம் பூரித்தார்கள்.

பின்பு உள்ளறைக்குள் புகுந்ததும் எதிரிலே நிலைக்கு மேலுள்ள சுவரிலே தமிழ்ப் பேரறிஞர் அண்ணு அவர்களின் வண்ணப்படம் கலைஞர் அவர்களின் கண்ணைக் கவர்ந்து களிப் பூட்டியது. இடப்புறமுள்ள அறையில் கட்டில், மெத்தை, காவி யுடை தொங்கும் கண்ணுடிப் பேழை, கயிற்றுமிதியாய், அதன் மேல் பாதக்குறடும், கித்தான் மிதியடியும் காட்சியளித்தன. இந்தக் கட்டிலிலேதான் அடிகளார் ஆவி பிரிந்தது என்று கூறினேன். இங்குள்ள பொருள்களெல்லாம் அடிகளாரால் பயன்படுத்தப் பெற்றனவா வென்று கலைஞரவர்களும் உடன் வந்தவர்களும் கேட்டார்கள். அடிகளார் மறைந்து எட்டாண்டுகள்வரை இவ்வில்லத்திலே தங்கியிருந்த அடிகளார் குடும்பத்தினர் அடிகளார் புழங்கிய பொருள்களில் புத்தகங்கள், பேழைகள், மேசை, நாற்காலிகள், கட்டில்கள் ஆகியவற்றைத் தவிர ஏனைய பொருள்களை யெல்லாம் ஒழித்து விட்டனர் என்று தெளிவுபடுத்தினேன்.

அவ்வறையிலிருந்து காட்சியமைக்கப் பெற்றிருக்கும் கூடத்துக்குள் புகுந்தோம். அக்கூடத்தின் தென்பக்கச் சுவரிலுள்ள கண்ணுடிப் பேழையில் அடிகளார் இத்தகைய பொருள்களைத்தாம் பயன்படுத்துவார்கள் என்பதைக் காட்டும் பொருட்டுப் போலிகையாக பீங்கான் உண்கலங்கள், சூறை விளக்கு, வெப்பதட்பக் காப்புக்கலம் (Thermoflask) ஆகிய

வற்றை விலைக்கு வாங்கி வைக்கப் பெற்றிருக்கின்றன என்று கூறினேன். மற்றொரு பேழையில் அடிகள் பயன்படுத்திய சிவமணி மாலை, மூக்குக் கண்ணாடி, பெருக்கக்கண்ணாடி (Microscope), தாம் வெளியூர்கட்கு வழிபடுதற்கு எடுத்துச் செல்லும் பிள்ளையார் திருவுருவம், பற்றுக்குறடு முதலிய வற்றைக் கண்டனர்.

மற்றொரு பெரிய நிலைப்பேழையில் அடிகளார் பயன் படுத்திய இசைத்தட்டுக்கள், நாட்குறிப்புக்கள் (Diaries) எழுதி அச்சிட்ட நூல்கள், வீட்டுச் செலவு கணக்குக் கையேடுகள் ஆகியவை காட்சியளித்தன. அடிகளார் கலவைத் தமிழில் தாம் எழுதிய நூல்களைத் திரும்ப அச்சிடும்போது பிற சொற்கட்குத் தூய தமிழ்ச்சொற்களைப் பெய்தமைக்குப் போலிகையாக 'மனக்கவர்ச்சி' என்ற நூலில் நான்கு பக்கங்களை மட்டும் சட்டமிட்டுத் தொங்க விடப்பட்டிருப் பதையும், தங் கைப்பட அழகொழுக எழுதிய அட்டைக் கடிதங்கள் நான்கும், தாள் கடிதங்கள் இரண்டும் சட்டமிட்டுத் தொங்கவிடப்பட்டிருப்பதையும் கையில் எடுத்துப் பார்த்து மிகவும் வியந்து மகிழ்ந்தார்கள். வலப்பக்கம் சுவரோரமாக மேற்புறமாகத் திறக்கக்கூடிய கண்ணாடிக்கதவுகளுள்ள ஐந்து மேசைகளில் அடிகளாரின் முதற்பதிப்பு நூல்களும், தாமே நடத்திய இதழ்களும், ஆங்கிலத்திலும் தமிழிலும் முத்துப் போல அழகொழுக எழுதியுள்ள கையெழுத்துப் படிகளும், நாட் குறிப்பேடும் (Day-book) கவின்மிகு காட்சியளித்தன.

அடிகளார் கிறித்தவக் கல்லூரியில் ஆசிரியராகவிருந்த காலத்தில் தம்மிடம் பயின்ற அறிவு சான்ற நாவலர் பாரதியார், சி. என். முத்துரங்க முதலியார், சர் ஆர். கே. சண்முகஞ் செட்டியார், டாக்டர் ப. சுப்பராயன், ஆர். வி. கிருஷ்ணையர், திருப்புகழ்மணி, டி. எம். கிருட்டிணசாமி ஐயர் தணிகைமணி முதலியோர் அடங்கிய கூட்டணிப்படம் தென் புறச்சுவரில் காட்சியளித்தது. அக்கூடத்தின் மேற்புறமுள்ள நான்கு சுவர்களிலும் பெரும்புலவர் பெருமக்கள் உருவப் படங்கள் அணிபெற நிறுத்தப்பெற்றிருப்பது கலைஞரவர்களின் கருத்தைப் பெரிதுங் கவர்ந்தது.

அடுத்துக் கூடத்தின் இடப்புறம் 1937இல் இந்தி எதிர்ப் பியக்கம் தோன்றிய காலமுதல் வெளியிடப்பெற்றஅறிக்கைகள், கடிதங்கள், துண்டு வெளியீடுகள், சிறு சிறு நூல்கள், 'தமிழ்நாடு தமிழருக்கே' என்ற நாட்காட்டி (Calendar), தமிழ்க்கொடி ஓவியம் அச்சிடப்பட்டுள்ள மேசைவிரிப்பு

முதலியன காட்சியாக அமைக்கப்பெற்றிருந்தன. தமிழ்ப் பாதுகாப்புக் கழகம் வெளியிட்ட தமிழ்க்கொடி ஒன்று மட்டும் சுவர்ப்பக்கம் விரித்து வைக்கப்பெற்றிருந்தது. அதனடியில்,

"1938இல் திருவாரூரில் இந்தி எதிர்ப்பு மாணவர் ஊர்வலத்தில் 'தமிழ் வாழ்க இந்தி ஒழிக' என்று முழங்கிக் கொண்டு கலைஞர் அவர்கள் ஏந்திச்சென்ற கொடி இதுதான்" என்று அச்சிட்டுச் சட்டம் போடப்பட்டுள்ள அறிவிப்பினைக் கலைஞர் அவர்கள் கண்டு புன்னகை பூத்தார்கள். அதனைக் கண்ட உடனிருந்தவர்கள் கொல்லெனச் சிரித்தனர்.

அடுத்து ஒரு கோப்பில் இருந்த 23-11-1936இல் 'தமிழ் நாட்டுக்கு இந்தி வேண்டுமா?' என்று தென்னிந்திய தமிழ்ச் சங்கம் வெளியிட்ட அறிக்கையையும், அதற்கு 26-11-36இல் மதிப்புக்குரிய இராசாசி அவர்கள் எழுதிய விடைக் கடிதத்தையும் கலைஞர் அவர்கள் பார்த்துக் கடிதத்தை மட்டும் உன்னிப்பாக முற்றும் படித்தனர். கழக அமைச்சர் திரு வ. திருவரங்கம் பிள்ளை அவர்கள் தமிழ்ப் பாதுகாப்புச் சங்கச் சார்பில் இந்தி எதிர்ப்புச் சொற்பொழிவாற்ற நெல்லைக்கழைத்த தற்கிணங்கி அறிஞர் அண்ணு அவர்கள் நாவலர் சோமசுந்தர பாரதியார் தலைமையிலும், பேராசிரியர் மு. சி. பூரணலிங்கம் பிள்ளை தலைமையிலும் 12, 13, 14-10-1937 ஆகிய மூன்று நாட்களிலும் இந்தி எதிர்ப்புப் பற்றிச் சொற்பொழிவாற்றி ஞர்கள். அச் சொற்பொழிவுகட்கு அச்சிடப்பெற்ற அறிக் கைகளை ஒரு கோப்பிலே கலைஞர் அவர்கள் கண்டு வியந்த தோடு இவற்றையெல்லாம் இத்தனை யாண்டுகளாகப் போற்றிப் பாதுகாத்து வைத்திருப்பது ஓர் அரிய செயலெனப் பெரிதும் புகழ்ந்து பாராட்டினர்.

இந்தி எதிர்ப்பியக்கம் தொடங்கியபோது பார்ப்பனர்கள் இந்திக் கல்வியை வரவேற்றுத் தாங்கள் அதனைப் படித்ததோடு எதிர்ப்பியக்கத்தையும் தமிழையும் பழித்தனர். பார்ப்பனர் இதழ்களும் இந்தி எதிர்ப்பினைத் தாக்கி எழுதின. எனவே இந்தி எதிர்ப்பியக்கத்தோடு பார்ப்பனர் எதிர்ப்பியக்கமும், தனித்தமிழ் இயக்கமும் சேர்ந்து வீறுபெற் றெழுந்தன. தமிழ்ப் பாதுகாப்புக்கழகம் 'கபிலரகவல்,' மணிமேகலை என்னுஞ் செந்தமிழ்க் காப்பியத்திலுள்ள 'ஆபுத்திரனகவல்' என்ற இரண்டினையும் பல ஆயிரம் படிகள் அச்சிட்டுக் காலணு விலை வைத்துப் பரப்பியது. மேலும் வடசொல் தமிழ் அகரவரிசை, மக்கட்பெயர் அகரவரிசை, இல்லப் பெயர் அகரவரிசை, அழைப் பிதழ் எழுதுமுறை, பிழை நீக்கி எழுதுமுறை என்ற நூல்களை

ஓரணு விலையில் வெளியிட்டுத் தனித்தமிழைப் பரப்பியது. கபிலரகவலும், ஆபுத்திரனகவலும் அழகுபெற வைக்கப் பெற்றுள்ள கோப்பினைக் கலைஞரவர்கள் எடுத்துப் பார்த்துப் பெருமகிழ்வுற்றனர்.

அடுத்து மறைத்திரு மறைமலையடிகள் 14 ஆண்டுக்காலம் முறையாக எழுத்தெண்ணிப் படித்து வரி வரியாகக் கோடிட்டும் ஓரங்களில் குறிப்புக்கள் எழுதியுமுள்ள மூவர் தேவாரத் திருமுறையினை எடுத்துக் காட்டினேன். அதனைப் பார்த்த கலைஞரவர்கள் அடிகளார் நூலாராயும் முறையினை வியந்து பேசினர். அதன்பின் அமெரிக்காவிலுள்ள அறிவியற் புலவர்கள் அடிகளார்க்கு எழுதிய கடிதங்களுள்ள கோப்புக்களையும், அடிகளார் ஆங்கிலத்திலும் தமிழிலும் முத்துப்போல் அழகுற எழுதிய கையெழுத்துப் படிகளையும் புரட்டிப் பார்த்துப் பேருவகை யடைந்தனர்.

பக்கத்திலே பொறியியற் பேரறிஞரும் தமிழ் ஆராய்ச்சிப் பெரும் புலவருமாகிய பா.வே. மாணிக்க நாயக்கரவர்கள் எழுதிய நூல்களையும், ஆங்கிலத் தமிழ் அகரவரிசை ஏடுகளையும், காரைக் கட்டுவரை கணிதச் (Calculograph) சுவடியினையும் பார்வையிட்டனர். அகரவரிசைச் சுவடியிலுள்ள கையெழுத்துத் திரு நாயக்கரவர்களுடையதுதானு வென்று கேட்டனர். 'இல்லை; அவர்கள் துண்டுத் தாள்களில் எழுதி வைத்திருந்த சொற்களைப் பெயர்த்தெழுதச் செய்ததே இச்சுவடியாகும்' என்று கூறி அவர்கள் எனக்கும், என் தமையனுர்க்கும் எழுதிய கடிதங்களின் கோப்பை எடுத்துக் காட்டினேன். அதன்பின் தமிழ் எழுத்துக்களில் ஆய்தத்தைச் சேர்த்து உலக மொழிகளையெல்லாம் எழுதிப் படிக்கலாம் என்று அவர்கள் எழுதி வைத்திருந்த விளக்க அட்டைகளை எடுத்துக் காட்டினேன். உலகிலுள்ள எக்கலையாயினும் அதனைத் தமிழில் எழுதலாம், தனித்தமிழில் எழுதலாம் என்று காட்டிய பேரறிஞரும் ஆவர் என்றேன்.

அதன்பின் கீழ்ப்புறமும் வடபுறமுமுள்ள அறைகட்கு அழைத்துச் சென்றேன். அங்கே நடுவே இரும்புக் கம்பி நிற்கைகளிலும், சுவர்களிலும் வைக்கப் பெற்றிருந்த தமிழின் தொன்மையும் தனித்தன்மையும் வளமையும் காட்டும் கருத்து விளக்க அட்டைகளையும், சேர சோழ பாண்டியர் காலத்தில் தமிழ் நிலத்தின் பரப்பினைக் காட்டும் வண்ணப் படங்களையும் ஒவ்வோர் அறையின் மேற்சுவர்களில் சூழவும் கவின் பெற நிறுத்தப் பெற்றிருக்கும் புலவர் பெருமக்கள் உருவப் படங்களையும் பார்த்துப் பேருவகை யடைந்தனர்

அடுத்த கூட்டத்திற்குப் போதற்கு நேரமாகிவிட்டது; இவற்றை யெல்லாம் கவனமாகப் பார்ப்பதற்கு நீண்ட நேரம் வேண்டும்; இன்னொரு முறை வந்து பார்த்தல் வேண்டும் என்று கலைஞரவர்கள் கூறவே முகப்பிலுள்ள கூடத்தின்வழி மாடிக்கு அழைத்துச் சென்றேன். ஏணிப் படிப்பக்கமுள்ள வழங்கும் நூலகத்தைக் காட்டினேன். பின்பு மாடியில் அம்மை அம்பலவாணர் கோயில் கொண்டிருப்பதையும், ஒலி பெருக்கியுள்ள பேழையினையும், பகலில் அடிகளார் சிறிது நேரம் அறிதுயில் கொள்ளும் கட்டில் மெத்தையினையும், இரவில் நூல் படிப்பதற்கும் நூல் எழுதுவதற்கும் வைக்கப் பெற்றிருந்த மேசை, தள்ளுகதவுள்ள ஓரடுக்குப்பேழை, நாற்காலி முதலியவற்றையும் பார்த்து மகிழ்ந்தனர்.

அதன்பின் கீழே இறங்கி நாற்காலியிலமர்ந்து பார்வையாளர் கருத்துரை ஏட்டில் தமது பாராட்டுரையினை எழுதினர்கள். அது வருமாறு:

> " தமிழ்மலை மறைமலையின் பெயரால் விளங்குகின்ற இந்தக் கலைமன்றம் எத்தனையோ உணர்ச்சி மயமான கனவுகளை நிறைவேற்றி வெற்றிகண்ட பெருந் தமிழரின் நினைவைப் பாடிக்கொண்டே யிருக்கிறது."
>
> (ஒ-ம்.) மு. கருணநிதி.

அவர்கள் கையெழுத்துக்குக் கீழே பொதுப்பணித்துறை அமைச்சரவர்களும், குடிநீர் வாரியத் தலைவரவர்களும் கையெழுத்திட்டனர்.

அடியிற்கண்ட வேண்டுதல்களைக் கொண்ட கடிதத்தை மாண்புமிகு கலைஞரவர்களிடம் வழங்கி அதன் படி ஒன்றைப் பொதுப்பணித்துறை அமைச்சரவர்களிடமும் கொடுத்தேன்.

*மாண்புமிகு டாக்டர் கலைஞர்* *27—4—72*
மு. கருணநிதி அவர்கள்,
*தமிழக முதலமைச்சர்,*
*சென்னை-9.*

பெருமதிப்புக்கும் பேரன்புக்குமுரிய அரசியல் சூழ்ச்சியும், நுண்மாண் நுழைபுலமும் மிக்க பேரறிஞர் அவர்களே!

வணக்கம். தாங்கள் இன்று மறைத்திரு மறைமலையடிகள் பெருக வாழ்ந்த கலைமன்றத்துக்கு வருகை புரிந்தமை மட்டற்ற மகிழ்ச்சி தருகின்றது.

52 ஆண்டுகளாக மறைமலையடிகள் வகுத்த வழி நின்று கழக ஆட்சியாளராகவிருந்து தமிழ்த் தொண்டாற்றிவரும் தமியேன் கருதியவைகளெல்லாம் இனி இனிதே நிறை வேறும் என்ற நம்பிக்கை ஏற்பட்டுள்ளது.

தம் உள்ளத்திலே நல்லதெனத் தோன்றுவதை உடனே நிறைவேற்றுந் திண்ணியரான தங்களிடம் யான் விரும்பி வேண்டுவனவற்றை அடியிலே குறிக்கின்றேன்.

க. 'மறைமலையடிகள் கலைமன்றம்' இருக்கிற 'சாவடித் தெருவுக்கு மறைமலையடிகள் திருப்பெயரைச் சூட்டுதல்.

உ. மன்றம் இருக்கிற 'சமீன் பல்லாவரம்' என்ற வட்டத் துக்கு மறைமலையடிகள் பெயரைச் சூட்டுதல்.

ங. மன்றத்தின் அருகிலே இருக்கிற 'அரசினர் உயர்நிலைப் பள்ளி'க்கு மறைமலையடிகள் பெயரைச் சூட்டுதல்.

ச. சைதாப்பேட்டை நந்தனத்திலிருக்கிற 'அரசினர் கலைக் கல்லூரி'க்கு மறைமலையடிகள் பெயரைச் சூட்டுதல்.

ரு. சென்னைக் கடற்கரைச் சாலையில் புதிதாக அமைக்கப் பெறுகின்ற கூவம் பூங்காவுக்கு மறைமலையடிகள் பெயரைச் சூட்டுதல்.

சு. மறைமலையடிகள் கலைமன்றத்தை அரசினர் சுற்றுலாக் காட்சிக் கூடங்களில் ஒன்ருகச் சேர்ப்பித்து மக்கட்குப் பயன் தரும்படி செய்தல்.

எ. பல்லாவரம் பெருஞ் சாலையிலிருந்து கலைமன்றத் துக்குச் செல்லும் வாயிலில் ஒரு நிலையான வளைவு அமைத்தல்.

இவற்றைப் பேருள்ளங்கொண்டு நிறைவேற்றியருளும்படி பணிவன்போடு வேண்டிக்கொள்ளுகிறேன்.

தங்கள் அன்புள்ள,

(ஒ-ம்.) வ. சுப்பையா,

கழக ஆட்சியாளர்.

கலைமன்றத்தைக் கண்குளிரக் கண்டு, கழிபேருவகை யடைந்த கலைஞர் அவர்களையும் உடன்வந்தவர்களையும் குடிநீர்த் திட்டம் துவக்க விழாவுக்கு வழிஅனுப்பிவைத்து மட்டற்ற மகிழ்ச்சியடைந்தேன்.

வ. சுப்பையா

———

# இறைமையில் இசைந்த வாழ்வு

[திரு. மா. சண்முக சுப்பிரமணியம்]

## 14

## உண்மையனுபவம்

**இயற்கையும் இறையுணர்வும் :**

இறையுணர்வு என்பது இணையில்லாததொரு தனி அனுபவம் என்பதனை நாம் ஒவ்வொருவரும் உணர்ந்து காணலாம் என்று இறைமையில் இசைந்தோர்கள் எடுத்தோதியுள்ளனர்.

நாம் பிறந்து வாழும் உலகம், இவ்வுலகத்தைச் சூழ்ந்து நிற்கும் பரவெளி, அப் பரவெளியில் சுழன்று ஒளிரும் அண்டங்கள்—இந்த இயற்கைக் காட்சி இறைமையின் மாட்சியை நமக்கு எளிதிலே உணர்த்துகின்றது.

அருணோதயத்தின் அழுகுதானென்ன ? அந்தி வானத்தின் அற்புதந்தானென்ன ? விண்ணின் மீன்கள் கண் சிமிட்டை வியந்து நிற்கும் வெண்ணிலவும், வானத்துத் தண் மதி வளர்ந்து தேயும் வண்ணமும் கண்ணுக்கு மட்டுமா விருந்து, கருத்துக்குந்தானே !

வீசுதென்றலில் விளையும் இன்பந்தானென்ன ? தென்றலில் திளைத்து அசைந்தாடும் அழகிய மலர்ச்செடியில் மணம் மட்டுமா கமழ்கின்றது ? மனத்தை மகிழ்விக்கும் குணமுமன்றோ உள்ளது? பச்சிளந்தளிர் ! இதிலுள்ள இயற்கையழகுதான் எவ்வளவு ? வண்ணச் சிறுமலரின் வனப்பினை என்னென்பது ?

ஓடும் நீரின் ஒலியிலே, பாடும் பறவைப் பண்ணிலே நம் இதயம் இசைகின்றது.

அலைகடல் ஓசை நமக்கு உணர்த்துவதையே ஆழ்கடல் அமைதியும் உணர்த்துகிறது.

இவ்வாறான இயற்கை எழிலின் ஏற்றத்திலே இசைந்து நிற்கும் கவியுள்ளம்,

''திடம்பெற வோங்கிய இயற்கைத் தனி இன்பமயமாம்''
—(இராமலிங்க அடிகள்)

என்றும்,

''எத்தனை கோடி இன்பம் வைத்தாய்—எங்கள்
இறைவா! இறைவா! இறைவா!''
—பாரதியார்

என்றும் இயற்கையின் இன்பத்தையே இறைமையாகக் காணு கின்றது! ஏன்? கவிகள் மட்டுமா இவ்வாறு காணுகின்றனர்? ஐயுணர்வினைப் பெற்றுள்ள நாம் ஒவ்வொருவருமே இயற் கையில் இசைந்து அனுபவத்தைப் பெறுகின்றோம். எனினும், நமக்கு இந்த அனுபவத்தில் அடங்கியுள்ள உண்மையை ஓர்ந்து காண ஓய்வில்லை. தேர்ந்து காணும் தெளிவில்லை. எனவே, ஐயுணர்வு எய்தியும் மெய்யுணர்வு எய்தா நிலையி லுள்ளோம்!

இயற்கைத் தனியனுபவம்:

இயற்கைவழி இறையுணர்வு பெற்று ஏற்றமுற்றோர்கள், இயற்கையின் அழகிலே நாம் பெறும் தனி அனுபவமே இறை யுணர்வு என்பதைத் தெளிவாகக் கூறியுள்ளனர்:

''தங்குமோர் இயற்கை தனியனுபவத்தை''
—(இராமலிங்க அடிகள்)

இயற்கையை நுகர்ந்து நாம் அடையும் தனித்த அனு பவந்தான் இறையுணர்வு என்பது ஐயத்துக்கிடமின்றிக் கூறப் படுகின்றது.

ஏன் இது தனி அனுபவமாகின்றது?

ஆனந்த அனுபவம்:

ஐம்புலன்களால் நாம் உணர்ந்து காணும் இயற்கைப் பொருள்கள் எதையும் நாம் வருணித்து விடலாம். மலரின் அழகையும், மலையின் தோற்றத்தையும் நாம் வருணித்து விடலாம். பருப்பொருள்களின் இன்ப அனுபவம் எதையும் வருணித்தல் இயலும். ஆனால், இயற்கையில் இசைந்து நிற்கும் இறைமையை, அந்த இறையனுபவத்தை எடுத்துக் கூறுதல் இயலாது. ஏனெனில், இறைமையை நாம் காண்பது புலன்கள் வழியன்று; அகவுணர்வாகவே இறைமையை நாம்

காண்கிறோம். அவ்வுணர்வு சொல்லுக்கும் பொருளுக்கும் கரணங்களுக்கும் அப்பாற்பட்டது; உணர்வுக்குங்கூட அஃது ஓரளவு அப்பாற்பட்டதாகின்றது. இவ்வாறு சொல்லுக்கும் பொருளுக்கும் அப்பாற்பட்டு நின்றாலும், அந்த அனுபவம் ஆனந்தமானது :

> "சொல்லொழியப் பொருளொழியக் கரணமெல்லாஞ்
> சோர்ந்தொழிய உணர்வொழியத் துளங்காநின்ற
> அல் லொழியப் பகலொழிய நடுவே நின்ற
> ஆனந்த அனுபவமே !"

—இராமலிங்க அடிகள்

ஆம்! இறையுணர்வு ஓர் ஆனந்த அனுபவந்தான். இந்த அனுபவம் பெற்ற உள்ளம் களியாட்டம் கொள்கின்றது.

இயற்கையெல்லாமாய் நிறைந்து நிற்கும் இறைமையை உணரும் நாம் காக்கையையும் குருவியையும் நம் இனமென்றே எண்ணுகிறோம்; கடலையும் மலையையும் நம் கூட்டமென்று கொள்ளுகிறோம்! நோக்கும் திசையெலாம் நாமாக இருக்கும் பொழுது, நம் சிந்தனையில் களியாட்டம் எழுவது இயல்பு தானே.

> "காக்கை குருவி எங்கள் சாதி—நீள்
> கடலும் மலையும் எங்கள் கூட்டம்;
> நோக்குந் திசையெலாம் நாமன்றி வேறில்லை;
> நோக்க நோக்கக் களியாட்டம்."

—பாரதியார்

இந்தக் களிப்புணர்வு உண்மையானது, உறுதியானது. இது சித்தப்பிரமையால் எழும் சிந்தனைக் கோளாறன்று, பித்து நிலையில் பிறக்கும் பிறழ்ந்த மனப்போக்குமன்று. ஐம்புலன்கள் வழி இயற்கையின் ஏற்றத்தை உணர்பவர்களனைவருமே இயற்கையோடிணைந்து இந்த இன்ப அனுபவத்தைப் பெறுகின்றனர்.

அந்தமிலா ஆனந்த அனுபவம் :

பருப்பொருள்களிலிருந்து புலன்கள்வழி நாம் பெறும் இன்பங்களனைத்தும் நிலைத்து நிற்பதில்லை. பருப்பொருள்களைப் போன்றே அவை தரும் இன்பங்களும் தோன்றி மறைந்து விடுகின்றன, சலித்து விடுகின்றன. ஆனால், இறையுணர்வின்பம் தனிப்பட்டது. இயற்கையாக இலங்கும் பருப்

பொருள்களுக்கு அப்பாற்பட்டு நிற்கும் ஆற்றலாகிய இறை மையை ஓர்ந்து காணும் நம் அகவுணர்வு பெறும் இன்பமே இறையுணர்வின்பமாகும். பருப்பொருள்கள் மாறுகின்றன. மறைகின்றன. ஆனால், அப்பொருள்களுக்கு அப்பாற்பட்டு நிற்கும் ஆற்றலுக்கு மாறுதலோ மறைதலோ இல்லை.

மலரின் மணத்தை நுகர்கின்றோம், அதன் அழகை அனுபவிக்கின்றோம். காலையில் மலர்ந்த அம்மலர் மாலையில் வாடி விடுகின்றது, மணத்தை இழக்கின்றது. மலராகிய பருப் பொருளிலே நாம் பெறும் இன்பமும் மறைந்து விடுகின்றது. ஆனால், வண்ணமலருக்கு வனப்பையும் மணத்தையும் அளித்த ஆற்றல், அந்த வனப்பின் வனப்பாக, மணத்தின் மணமாக உள்ள இறைமை மாறுவதில்லை. அதுபோல் இறைமையை ஓர்ந்து பெறும் இன்பமும் மாறுவதில்லை, மறைவதில்லை.

என்றும் வாடாப் புதுமலராய் இன்பம் அளிக்கும் இறை மையை, "உலர்ந்திடாது என்றும் ஒன்றுபோல் மலர்ந்து மணம் வீசும் மலரே" என்று சிந்தித்துப் பாடியுள்ளனர், சீரடியார்கள் :

*"உலர்ந்திடாது என்றும் ஒருபடித் தாகி*
*மலர்ந்து நல்வண்ணம் வயங்கிய மலரே"*
—(*இராமலிங்க அடிகள்*)

ஆதலால், இறையுணர்வு இன்பம் இறுதியில்லாதது. எனவே, அதனை 'அந்தமிலா ஆனந்தம்' என்கின்றனர், 'கரையில்லாத இன்பக்கடல்' என்கின்றனர் இறையுணர்ந் தோர்.

"**அந்த மிலா ஆனந்தம்** *பாடுதுங்காண் அம்மானாய்*"

"**அந்த மிலா ஆனந்தம்** *அணிகொள் தில்லை கண்டேனே*"
—(*மாணிக்கவாசகர்*)

"**கரையிறந்த இன்பக் கடலே** *பராபரமே*"
—(*தாயுமானவர்*)

**"குணங்கள் தாமில்லா இன்பம்":**

இந்த இடத்தில் நாம் அடிப்படையான ஒன்றை நினைவிற் கொள்ள வேண்டும்.

இயற்கைக் காட்சிகளால் நாம் அடையும் இன்பம் நிலைத் திருப்பதில்லையே? அருணோதயக் காட்சி அழகுடையது தான், ஆனால் அது சிறிது நேரத்தில் மாறி விடுகின்றதே?

தென்றல் காற்று உடலுக்கு இதமளிப்பது உண்மைதான். ஆனால் தென்றல் நின்று விடுகின்றதே? எவ்வாறு இஃது அந்தமிலா ஆனந்தமாகும்? என்ற வினா நம் சிந்தையில் எழலாம்.

இறையுணர்வின்பம் என்பது அருணோதயக் காட்சியைக் கண்ணால் கண்டு பெறும் இன்பமன்று, ஊறும் தென்றல் மருவுவதால் உடல் உறும் இன்பமன்று. அருணோதயம் அளிக்கும் காட்சியின்பத்தையும், ஊறுதென்றல் அளிக்கும் உடலுறு இன்பத்தையும் நுகர்ந்து அவ்வின்பங்களுக்கு அடிப் படையான இறைமையை ஓர்ந்து களிப்பதே இறையுணர்வு இன்பமாகும். எனவே, இறையுணர்வு இன்பம் கட்புலனால் கிட்டும் காட்சி இன்பமன்று, உடலுறு இன்பமுமன்று. ஆதலால் தான் இறையுணர்வின்பத்தைக் குணங்கள் இல்லாத இன்பம் என்று தெளிவாகக் கூறியுள்ளனர்:

"குணங்கள் தாமில்லா இன்பமே"

—(மாணிக்கவாசகர்)

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற குணப்பண்பு களுக்கு அப்பாற்பட்டு, அக்குணங்கள் ஏதுமில்லாத இன்பமாக இறையின்பம் உள்ளது.

எண்ணத்தால் எய்தும் எளிதான அனுபவம்:

இத்தகைய அந்தமிலா ஆனந்த அனுபவத்தினை, குணங்கள் தாமில்லாக் குன்றாத இன்பத்தினைப் பெறுவதற்கு நாம் காட்டிற்குச் சென்று கண்களை மூடிக் கடுந்தவம் புரிய வேண்டியதில்லை. மூச்சினை அடக்கவோ பேச்சினை ஒடுக்கவோ வேண்டியதில்லை. ஐம்புலன்களை அடக்கி நாம் அடைவதன்று இது, ஐயுணர்வின் துணை கொண்டே இம்மெய்யுணர்வினை நாம் பெறுகின்றோம்.

"ஓர்ந்து உள்ளம் உள்ளது உணரும்" தேர்ந்த நிலையில் தெளியும் அனுபவமே இது. "மருள் நீங்கி மாசறு காட்சியர் இருள் நீங்கிப் பெறும்" இன்ப அனுபவமே இது. "எப் பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருளின் மெய்ப் பொருள்" காணும் மேன்மை அனுபவம் இது.

இந்த இன்ப அனுபவத்தைப் பெறுவது மிகவும் எளிது, இஃது உள்ளத்தால் உன்னியதும் கிடைக்கும் உயர்ந்த அனு பவம், இதயத்திலே எண்ணியதும் கிட்டும் இனிய அனுபவம்.

இறைமை பற்றிய பேருண்மையை எண்ணி விட்டால் போதும், இதயம் இளகுகிறது, இன்பவுணர்வு பெருகுகிறது!

எண்ணத்திற் கெட்டாத பரவெளியில் எத்தனையோ கால மாக இடையருது ஒளிரும் அகில அண்டங்களுடன், அவற்றை நிலைகுலையாவண்ணம் நிறுத்தி ஆட்டும் நிகரில்லா ஆற்ற லுடன் நாமும் இணைந்துள்ளோம் என்ற உண்மையுணர்வு, மெய்யுணர்வு, நம் உள்ளத்தில் உதித்ததும் எத்தகைய இன்பம் ஊறிப் பெருகுகின்றது! இந்த இன்பவுணர்வுக்கு ஈடுமில்லை, இறுதியுமில்லை. எனவே தான், இவ்வுணர்வு அந்தமிலா ஆனந்தம் ஆகின்றது. இவ்வுணர்வினை எய்தும் ஒவ்வொருவரும் ஆனந்த அனுபவத்தைப் பெறுகின்றோம். இதில் ஐயத்திற்கிடமில்லை.

"வானில் பறக்கின்ற புள்ளெலாம், மண்ணில் திரியும் விலங்கெலாம், கானிழல் வளரும் மரமெலாம், காற்றும் புனலும் கடலெலாம், உலகத்து உயிர்களெலாம் இறைமை யின் கூறுகளாகவே இலங்குகின்றன; அந்த இறைமையின் கூருகவே நானும் அமைகின்றேன்; எனவே, அகிலாண்டங் களோடும் அனைத்துயிர்களோடும் உறவு கொண்டுள்ளேன் நான். இந்த எண்ணத்தை இதயத்தில் இசைத்து விட்டால் நம் உள்ளத்தில் ஊறிப் பெருகுகின்றது உவட்டாத இன்ப வெள்ளம்.

இந்த எண்ணத்தை இதயத்தில் இசைத்து, இதன் பயனுய் நம் உள்ளத்திலே உவட்டாத இன்ப உணர்வு எழுகின்றதா என்பதை நாம் இன்றே, இப்பொழுதே காணலாம்.

> "எண்ணமிட்டாலே போதும்
> எண்ணுவதே இவ்வின்பத்
> தண்ணமுதை யுள்ளே
> ததும்பப் புரியுமடா!"
>
> —(பாரதியார்)

என்பது மருளுரையன்று, அருளுரை. இப்பேருண்மையை இவ்வளவு எளிதாகவும் தெளிவாகவும் கூறியுள்ளனர், நம் முன்னோர்கள்.

**இரண்டற இசைதல்: "கண்டுங்காணேன்" என்று உணர்தல்:**

இயற்கையில் இலங்கிடும் இறைமையும் அதனை எண்ணிப் பார்த்திடும் நாமும் இரண்டற இணைந்தே உள்ளோம் என்ற

மெய்யுணர்வினை "அத்துவித அனுபவம்" (இரண்டற உணரும் அனுபவம்) என்று கூறுகின்றன :

> "அத்துவிதமான ஐக்கிய அனுபவமே"
>
> —(தாயுமானவர்)

இறைமை வேறு, நாம் வேறு என்ற எண்ணம் இன்றி, இறைமையும் நாமும் இரண்டாக உள்ளோம் என்ற நினைப்பினை மறந்து, இறைமையோடு இசைதலையே "அத்துவிதமான ஐக்கிய அனுபவம்" என்று விளக்குகின்றனர் வித்தகர்கள்.

இரண்டற இணைந்து இறைமையை உணரும் நாம் அந்த இறைமையை முழுதுமாக உணர்ந்து விடுகின்றோமா ? இல்லை. "இன்னம் இன்னம் அறியேம்" என்ற அனுபவமாகவே அஃது இருக்கின்றது :

> "அத்துவித வனுபவத்தை அனந்த மறை
> இன்ன மின்னம் அறியே மென்னு
> நித்தியத்தை................................."
>
> —(தாயுமானவர்)

அத்துவிதமான ஐக்கியம், இரண்டற இணைதல் என்பது இறைமையை உணரும் முறையே ஆகும். இறைமையை நாடும் நம் உள்ளம், இறைமையை விட்டுத் தனித்ததன்று என்ற உணர்வோடு இறைமையைக் காணலே அத்துவிதமான ஐக்கியமாகின்றது. அந்த நிலையிலும் இறைமையை முழுதுமாக உணர்தல் முடியாத தொன்றாகும். எனவே, எல்லா ஞானத்தையும் ஐயமறத் தெளிந்தோரும் முழுதுமாகக் காண முடியாத அனுபவமாகத்தான், 'கண்டுங்காணேன்' என்கின்ற அனுபவமாகத்தான் இறைமை இன்பம் உள்ளது என்பதனை எடுத்துக் காட்டுகின்றனர், சான்றோர்கள்.

> "......................................
> எஞ்ஞானம் அறத் தெளிந்தோர் கண்டுங் காணேம்
> என்கின்ற அனுபவமே இன்பத் தேவே"
>
> —(இராமலிங்க அடிகள்)

எனவே, இறையுணர்வு என்ற ஆனந்த அனுபவம் 'கண்டுங் காணேம்' என்ற அனுபவமாகவே உள்ளது, 'இன்ன மின்னம் அறியேம்' என்ற அனுபவமாகவே உள்ளது. ஆதலால் தான் அஃது அந்தமிலா ஆனந்த அனுபவமாகின்றது. இறையுணர்வின் தனிச் சிறப்பு இதுவேயாகும்.

மலரினை முகர்வதும், பாலினைப் பருகுவதும், தேனினைச் சுவைப்பதும் அனுபவந்தான். இவை அளவுடைய பொருள்கள். எனவே, இவற்றை முழுதுமாக நாம் அனுபவிக்க முடிகின்றது. இறைமையோ எல்லையில்லா இயற்கையனைத்தோடும் இணைந்து நிற்பது; அந்த இயற்கையையும் தாண்டி நிற்பது; இயற்கையில் இணைந்துள்ள நம்மையும் அடக்கி அமைவது. அடங்கியுள்ள நம்மால், நம்மை அடக்கி நிற்கும் இறைமையை அனைத்துமாகக் காணுதல் இயலாததுதானே ? எனவேதான், இறையுணர்வு என்பது இன்ப அனுபவமாகவும், அதே நேரத்தில், 'கண்டுங் காணேம்' என்கின்ற அனுபவமாகவும் உள்ளது; 'கண்டுங் காணேம்' என்ற அனுபவத்தால் அது 'கரையிறந்த இன்பக்கடல்' ஆகின்றது !

**விஞ்ஞான நாட்டின் மெய்ஞ்ஞானம் :**

அன்று கூறப்பட்ட இவ்வுண்மைகளை இன்றுங் கூறுகின்றனர் அறிஞர்கள் ! உண்மைக்கு மாற்றமேது, மறைவேது ?

அம்புலிக்கு ஆளனுப்பும் அமெரிக்க நாட்டின் இன்றைய திங்கள் இதழொன்றிலே இயற்கையில் இலங்கிடும் இறைமை பற்றி எடுத்துக் கூறப்பட்டுள்ளது ! அதனைக் காண்போம் :

"இரவு நேர வானத்தில் எத்தனை எத்தனை விண்மீன்கள் ! அவை ஒவ்வொன்றுக்கும் இடையிலுள்ள வெளியின் விரிவுதான் எவ்வளவு ! நம் கண்ணுக்குப் புலப்படும் மிக அருகிலுள்ள விண்மீன் பூமியிலிருந்து நாற்பது இலட்சம் கோடி கிலோ மீட்டர்களுக்கு அப்பாலன்றோ இருக்கின்றது! அத்தனை தொலைவிலுள்ள அவற்றை நாம் பார்த்துக்கொண்டே இருக்கும்பொழுது, அவை நம் இதயத்தருகில் வந்து இன்முறுவல் காட்டுகின்றனவே !....

"அண்டங்களின் அதிசயத்தை அணுவினிலும் காண்கின்றோம். அற்பமான புல்லிதழ் நிகழ்த்தும் அற்புதந்தான் என்ன ! ஆதவன் ஒளியின் ஆற்றலை எடுத்து, அதன் உதவியால் மண்ணின் நீரையும் காற்றின் கரியமில வாயுவையுங் கலந்து, நாம் மூச்சு விடுவதற்கான உயிர்க் காற்றினை அது அளிக்கின்றதே! அதன் நுண்ணிய பசுமைத் துகள் உலகத்தையே பசுமையாக்குகின்றதே !

"புல்லிதழ் நுனியில் பொலிந்திடும் பனித்துளி! விண்ணகமிருந்து மண்ணகத்திற்கு இறங்கியுள்ள அத்துளியின் பெருமையை என்னென்பது ! புத்தம் புதிய அத்துளியின் பழைமைதான் என்ன ! ஊழிக்காலத் தொடக்கத்தில், உலகம் குளிர்ந்த நேரத்தில், உதித்த நீரின் துளியன்றோ அது ! ஆதவனைக்

கண்டதும் மினுமினுத்துத் துடிதுடிக்கும் அந்நீர்த்துளி ஆவியாக மாறி மீண்டும் விண்ணகத்திற்கு ஏறிவிடுகின்றதே!

"இவற்றையெல்லாம்விட உயர்ந்தது மனிதனின் மாண்பு! எண்ணில்லா உயிரினங்களிலிருந்து எத்தனையோ இலட்சம் ஆண்டுகள் முன் அவன் பிரிந்து வளர்ந்தான்; மாறி மலர்ச்சி யுற்றான்; அன்பும் அருளும், பண்பும் பாசமும், நன்மை தீமை என்ற நல்லுணர்வும் அவன் பெற்றான். காலப்போக்கிலே அவன் கவிஞனாகவும், கலைஞனாகவும், விஞ்ஞானியாகவும், மெய்ஞ்ஞானி யாகவும் விளங்குகின்றான்! இம்மலர்ச்சி எத்தகைய அற்புதம்! இவையனைத்தும் அவன் வளர்ச்சியின் தொடக்கந்தானே! இன்னும் மனிதன் எத்தகைய வளர்ச்சியுறப் போகின்றானோ?

"இவ்வாறு விண்ணையும் மண்ணையும், இவற்றை இணைத்து நிற்கும் மனிதனையும் உற்று நோக்கி ஓர்ந்தாலன்றோ உண்மைப் பொருளின் ஒண்மை விளங்குகின்றது! இதில்தானே இறைமையின் அருளாட்சி இலங்குகின்றது!

"இவற்றையெல்லாம் கண்டு கண்டு அதிசயிக்கும் ஆற்றலை நாம் இழந்துவிட்டோமே! என்னே நமது அவல நிலை! இறைமையை இங்குக் காணாமல் எங்கோ அதனைத் தேடுகிறோம்! என்னே நமது அறியாமை!

"இயற்கையின் ஏற்றத்தினை எண்ணி எண்ணி வியப்பதுவே இறைமையைக் கண்டு துதிப்பதுவாம்."

—இவ்வாறு கூறுகின்றார், வெண்ணிலவினை எட்டும் விஞ்ஞான நாட்டிலே வாழ்ந்து வரும் மெய்ஞ்ஞானி ஒருவர்.*

விஞ்ஞானத்திற்கு முரண்பட்டதன்று மெய்ஞ்ஞானம்; அறிவியலுக்கு மாறுபட்டதன்று ஆன்மவியல். அறிவியல் வளர வளர ஆன்மவியலும் ஒளிருகின்றது. மெய்ஞ்ஞான உண்மைகள் விஞ்ஞான வளர்ச்சியால் விளக்கம் பெறுகின்றன. அமெரிக்க நாட்டு அறிஞரின் இக்கட்டுரை இந்த உண்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

**இறையனுபவம் எளிதானது, இயல்பானது :**

இறையனுபவம் என்பது எவ்வளவு எளிதாக உள்ளது? இயற்கையில் அமைந்துள்ள எழிலையும் ஏற்றத்தையும் உணர்ந்து கண்டு உன்னுவதே இறையுணர்வு பெறும் எளி தான முறையாகிறது. இதனை அன்றுங் கூறியுள்ளனர்,

* 'The Way to God' By The Reverend Weston Stevens.
(Readers' Digest—April, '72)

இன்றுங் கூறுகின்றனர். இது பொய்யுரையாகவோ புனைந்துரையாகவோ இருக்கக் காரணம் ஏதுமில்லை.

ஆறுணர்வு படைத்த அனைவருமே இந்த அனுபவத்தினைப் பெறுவது உறுதி. ஒவ்வொருவருக்கும் ஏற்படும் இந்த அனுபவத்தின் செறிவு கூடியோ குறைந்தோ இருக்கலாம். நாளடைவில் இயல்பான இறையுணர்வினை நாம் எய்தி விடுகின்றோம்.

இதயத்தில் இயல்பான இயக்கத்தின் பயனாகவே எழுகின்றது இறையுணர்வு.

உலகத்து உயிர்களனைத்தும் இன்பத்தையே நாடுகின்றன. இன்பம் நாடும் இயல்பில்லா உயிரினம் எதுவும் இல்லையென்றே கூறலாம். மக்களும் இன்பத்தையே நாடுகின்றனர். மக்களின் இயல்பான இந்த இன்பவேட்கையே இறைமை வேட்கையாகின்றது; இன்ப நாட்டமே இறைமை நாட்டமாக முதிர்கின்றது.

பள்ளத்தை நோக்கிப் பாய்ந்தோடும் நீர்போல் இறைமை வெள்ளத்தில் இசைவதை நாடுகின்றது, நம் இதயம்.

*''பள்ளத்தில் வீழும் புனல்போற் படிந்துன் பரமவின்ப*
*வெள்ளத்தின் மூழ்கினர்க்கே எளிதாந்தில்லை வித்தகனே''*
—*(தாயுமானவர்)*

இந்த இன்பம் எவ்வாறு எழுகின்றது ?

ஒலிகள் இணையும்பொழுது இசை பிறக்கின்றது; உயிர்கள் இணையும்பொழுது இன்பம் பிறக்கின்றது. இஃது இயல்பேயாகும். இறையுணர்விலே நம் உயிர் எதனுடன் இணைகின்றது ? அவ்வுயிருக்கு மூலமான, அவ்வுயிருக்கு உயிரான இறைமையோடு இணைகின்றது! ஓருயிர் மற்றோர் உயிருடன் இணையும்போது இன்பம் பிறந்தால், அவ்வுயிர் தன் மூலமான பேருயிரோடு இணையும்பொழுது பேரின்பம் பிறக்கின்றது. அப்பேரின்பம், தாயைத் தழுவும் தவழுங் குழந்தை பெறும் இன்பத்தைவிட எத்தனையோ மடங்கு இனியது, செறிந்தது. எனவேதான்.

*''தங்குமோர் இயற்கைத் தனி அனுபவம்''*

*''அந்தமிலா ஆனந்த அனுபவம்''*

*''அத்துவிதமான ஐக்கிய அனுபவம்''*

என்று இறையுணர்வால் நாம் பெறும் இன்பத்தினை ஏற்றிக் கூறுகின்றனர், மெய்யடியார்கள்.

அனுபவமே உண்மையானது, அழிவில்லாதது :

அனுபவம் என்பது ஏதோ நிலையில்லாதது, நிழல் போன்றது என்று நாம் எண்ணினால் அது தவறாகும். அனைத்தின் பயனும் அனுபவந்தான் என்று கண்டோம்.

அனுபவம் ஒன்றுதான் நிலைத்தது, மெய்யானது. கனியினைச் சுவைத்து நாம் அனுபவிக்கின்றோம். கனி அழிந்து விடுகிறது. ஆனால், அதைச் சுவைத்த அனுபவம் அழிவதில்லை. மலரின் மணத்தை நுகர்ந்து அனுபவிக்கின்றோம். மலர் வாடி வதங்கி விடுகிறது. ஆனால், மணத்தை நுகர்ந்த அனுபவம் மறைவதில்லை. இவ்வாறு அனுபவத்தைத் தரும் பொருள்கள் மறைந்து விடுகின்றன. ஆனால், அனுபவம் நிலைத்து நிற்கிறது. எனவே, அனுபவம் ஒன்றே உறுதியானது, உண்மையானது.

இறைமை என்பது ஓர் அனுபவம் என்று நாம் கூறும் பொழுது அனுபவம் என்பதன் உண்மைத் தன்மையை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும்.

அழியும் பருப்பொருள்கள் அளிக்கும் இன்பத்தைப் போலன்றி அழியாத பரம்பொருள் அளிக்கும் இன்பம் அந்தமில்லா ஆனந்த அனுபவமாக உள்ளது.

அனுபவ உண்மையும், உண்மை அனுபவமும் :

உலகமனைத்திலும் ஒழிவற நிறைந்த உண்மைப் பொருளே இறைமையாகும். இந்த உண்மைப் பொருளை உணர்ந்து அனுபவிப்பதையே இறையுணர்வு என்கிறோம். ஆதலால், இறையுணர்வு என்பது உண்மையை உணரும் அனுபவம், உண்மையனுபவம் ஆகின்றது. உணர்ந்து அனுபவிக்கும் உண்மையாகவே இறைமை உள்ளதால், இறைமை என்பது அனுபவ உண்மை ஆகின்றது. எனவே, இறைமை என்பது அனுபவ உண்மை (The Reality that is experienced). இறையுணர்வு என்பது உண்மையனுபவம் (Experience of the Reality).

எனவே, இறையுணர்வு என்பது ஓர் உண்மை அனுபவம். அஃது இயற்கையோடுஇசைந்து நாம் பெறும் இன்ப அனுபவம் எல்லையில்லா இன்ப அனுபவம், 'கண்டுங்காணேம்' என்று, நாம் உணரும் அனுபவம்.

ஈடும் இணையுமற்ற இத்தகைய இன்ப அனுபவத்தால் நாம் எய்தும் நலன்கள் எவை என்று இனிக் காண்போம்.

# சங்க இலக்கியத்தில் கூகையும் குராலும், குடிஞையும் ஊமனும் ஆண்டலையும்

(The barn owl, The Collared scops owl,
Indian great horned owl, Brown fish owl, Hawk owl.)

[பி. எல். சாமி, பி.எஸ்ஸி.]

[பரல்-அ பக்கம் சஎக இன் தொடர்ச்சி]

ஊமன் : குறுந்தொகையில் ஊமன் என்ற பெயரையுடைய பெரிய ஆந்தை மறைமுகமாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் பிற்காலப் பாடல்களில் இந்தப் பெரிய ஆந்தை தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

"குராலான் படுதுயர் இராவிற் கண்ட
உயர்திணை ஊமன் போலத்
துயர்பொறுக் கல்லேன் தோழி நோய்க்கே"

—குறுந்தொகை 224

கிணற்றில் விழுந்த குரால் பசுவின் துயரத்தை இராவில் பார்த்த உயர்திணையாகக் கருதப்படும் ஊமன் யாதும் செய்ய முடியாமலும் யாரிடமும் சொல்ல முடியாமலும் துயரப்படுவது போலத் தலைவி காதல் நோயால் தவிப்பதைக் குறுந்தொகைப் பாடல் கூறுகின்றது. இந்தப் பாட்டில் 'உயர்திணை ஊமன்' என்று சொன்னதைக் கவனிக்க வேண்டும். அஃறிணையான ஊமன் என்ற வழக்கு சங்க காலத்தில் இருந்ததாலேயே அதனினின்றும் பிரித்துக்காட்ட உயர்திணை ஊமன் என்று கூறியுள்ளனர். அஃறிணை ஊமன் என்பது தற்காலத்தில் ஊமைக் கோட்டான் என்று அழைக்கப்படும் ஒருவகைப் பெரிய ஆந்தையாகும்.

"இரியல் மகளி ரிலைஞெமலு ளீன்ற
வரியிளஞ் செங்காற் குழவி—அரையிரவின்
ஊமன்பா ராட்ட வுறங்கிற்றே செம்பியன்றன்
நாமம்பா ராட்டதார் நாடு"

—முத்தொள்ளாயிரம் 77

"சிறுகூகை யுட்கவிழிக்க வூமன் வெருட்ட"

—மூத்ததிருப்பதிகம், காரைக்காலம்மையார் 2-3

''ஈமத் தூமமு மெரியினு மிருளொடு விளக்கா
வூமைக் கூகையு மோரியு முறழ்உறழ் கதிக்கும்''
—நீலகேசி, தரும 29

முத்தொள்ளாயிரத்திலும், காரைக்காலம்மையாரின் மூத்த திருப்பதிகத்திலும் ஊமன் என்ற பெயர் ஊமைக்கோட்டான் என்ற பெரிய ஆந்தையையே குறிப்பிட்டுள்ளதைக் கவனிக்க வேண்டும். இதையே ஊமைக் கூகை என்று நீலகேசி அழைத்தது. இதை ஊமத்தங் கூகை என்றும் நாட்டு மக்கள் அழைப்பர். ஈழத்தில் ஊமடங்குருவி, ஊமத்தங்கோழி என்றழைப்பதுண்டு. இந்த ஊமன் என்ற பேராந்தையைக் கடற்கரையோரங்களிலும் நீர்நிலையருகிலும் மரச்சூழலில் காணலாம். மீன்களைப் பிடித்துத் தின்னும் இந்தப் பேராந்தை 'ஊம் - ஊம்' என்று குரலோசை செய்வதால் இதற்கு ஊமன் என்று பெயரிட்டனர். இதனுடைய பிற பெயர்களும் ஊமன் என்ற பெயரடிப்படையாகவே தோன்றின. குறுந்தொகை 224ஆம் பாட்டிலே ஒருவகை ஆந்தையான அஃறிணை ஊமனை மறைமுகமாகக் குறிப்பிட்ட நுண்பொருள்போல மற்றொரு வகை ஆந்தையைக் குறித்த நுண்பொருளும் இருப்பதைக் காணலாம். குரால் என்பது ஒருவகைச் சிறிய ஆந்தையென்பது ஏற்கனவே விளக்கப்பட்டது. குரால் என்ற பெயர் பசுமாட்டையும் குறிக்கும் என்பது தெரிந்ததே. குரால் என்ற ஆந்தையினின்றும் வேறுபடுத்திக் காட்டிப் பசுமாட்டைக் குறிக்கவே குராலான் என்று குறுந்தொகைப் பாடல் கூறுகின்றது. இந்தக் குறுந்தொகைப் பாடலில் இரண்டுவகை ஆந்தைப் பெயரையும் மறைமுகமாக உணர்த்திக் காட்டியிருக்கும் நுண்ணிய புலமையைப் போற்றவேண்டும். உயர்திணை ஊமன் என்ற பெயர் சங்க காலத்திற்கு முன் தமிழில் இலக்கணம் இருந்ததற்குச் சான்றாகவும் உள்ளதைக் கவனிக்க வேண்டும். தொல்காப்பியம் சங்க காலத்திற்குப் பிற்பட்டது என்று சிலர் கூறுவர். குறுந்தொகையில் காணப்படும் இலக்கணச் செய்தி சங்க காலத்திற்கு முன்னர் இலக்கணம் இருந்ததைக் காட்டுகின்றது!

ஊமன் கூவுவதைத் தற்காலத்திலும் சிற்றூர்களில் நல்ல சகுனமாகக் கருதுவதுண்டு. ஊமன் கூவினால் குழந்தையைத் தாலாட்டக் கூவுவதாகவும் குழந்தை பிறக்கும் என்றும் நம்புவதுண்டு. ஊமன் பாராட்டக் குழந்தை உறங்கினதாக முத்தொள்ளாயிரம் கூறுவதை இது சார்பாகக் கவனிக்கவேண்டும். பிற்காலத்தில் ஆந்தையினப் பறவைகளையெல்லாம் கேடுதரும் பறவைகளெனக் கொண்டு சுடுகாட்டில் வைத்துக் கூறுவது

வழக்கம். ஊமன் சுடுகாட்டில் கூவுவதாகக் காரைக்காலம்மையார் மூத்ததிருப்பதிகத்தில் கூறினர். நீலகேசியும் அவ்வாறே கூறுகின்றது. பிற்காலத்தில் ஊமாண்டி காட்டுதல் என்ற வழக்குத் தோன்றிற்று. ஊமைக்கோட்டான் கண்ணை மூடாது உற்றுப் பார்ப்பதைக் கண்டு விடை கூருமல் முறைத்துப் பார்க்கும் மனிதனுக்குப் பெயராக்கினர். இம்முறையாக பயமுறுத்துவதற்கு ஊமாண்டி காட்டுதல் என்ற வழக்கு உள்ளது. ஊமைக் கூறனுகக் கூப்பிடுவது என்ற வழக்கும் வாய்பேசாது 'உம்' என்ற ஓசையால் கூப்பிடுவதைக் குறித்தது. ஊமைக்கோட்டானைக் கூமன் என்றும் அழைப்பர். முத்தொள்ளாயிரப் பாட்டில் ஊமன் என்பதற்குப் பாடமாற்றமாகக் கூமன் என்ற சொல் உள்ளது. மலையாளத்தில் ஊமன் என்ற பெயரும் கூமன் என்ற பெயரும் வழங்குகின்றது. மீன் கூமன் என்றழைப்பதுண்டு. சங்க காலத்திலும் கூமன் என்ற பெயர் வழங்கியிருக்கலாம் என்று கருதச் சான்று புறநானூற்றில் உள்ளது.

> "பதிமுதற் பழகாப் பழங்கண் வாழ்க்கைக்
> குறுநெடுந் துணையொடு கூமை வீதலிற்
> குடிமுறை பாடி யொய்யென வருந்தி
> அடனசை மறந்தவெங் குழிசி மலர்க்கும்" —புறம் 393

புறநானூற்றுப் பாடலில் நகரத்தில் பழகாத பழைமையான இடத்தில் வாழும் துணையொடு கூடிய கூமை என்று சொல்லப் பட்டிருப்பதைக் காணலாம். கூமை என்பது இவ்விடத்தில் கூமன் என்ற பேராந்தையாகவே இருக்கும். கொலாமி என்ற பழந் திராவிட மொழியில் 'குமன்' என்றும், கொடகு மொழியில் 'குமீ' என்றும் துளுமொழியில் 'கும்மே' என்றும் அழைக்கப் படுவது புறநானூற்றில் வரும் 'கூமை' என்ற பெயருடன் ஒத்துள்ளதைக் காணலாம். இந்த ஆந்தை பெரும்பாலும் ஆணும் பெண்ணுமாய்க் காணப்படும். ஒன்று கூவுங்கால் மற்றொன்று திருப்பிக் கூவும். மலையாளத்தில் முதலில் கூவும் ஊமனைக் கூமன் என்றும் அடுத்துக் கூவும் ஊமனைக் கூமத்தி என்றும் ஆண் பெண்ணுகக் கருதி அழைப்பர். கூமன் ஒரு குரல் கொடுத்தால் கூமத்தி இரண்டு குரல் கொடுக்கும். என்று மலையாள நாட்டு மக்கள் கூறுவர்.

பண்டைய எகிப்திய மொழியில் 'ம்' என்ற ஒலியைக் குறிக்கும் உருவெழுத்து ஓர் ஆந்தை அல்லது கோட்டானின் சித்திரமாகும். (ஊ)ம் (ஊ)ம் என்று குரலோசை காட்டும் ஊமனின் உருவத்தால் பழங்கால எகிப்தியர் 'ம்' என்ற

ஒலியைக் குறித்தது ஊமனின் மிகப் பழைய வரலாற்றைக் காட்டுகின்றது. எகிப்திய மொழியில் உயிரெழுத்துகள் இல்லை. பிற எழுத்துகளோடு சேர்ந்து உயிர் ஒலிக்குமென்பர். ஆதலின் 'ம்' என்ற ஒலியெழுத்தை அம், உம் என்றெல்லாம் இடத்திற்குத் தக்கவாறு ஒலித்தனராம். 'உம்' என்ற ஓசைக்கும் ஊமனுக்கும் உள்ள தொடர்பைத் தமிழிலும் காண்கிறோம். மிகப் பழைய வரலாறு பெற்ற (கி. மு. 3000) எகிப்திய மொழியிலும் காண்கிறோம். வடகிழக்கு இந்தியாவில் வாழும் அங்காமி நாகர் இனத்தில் தம் பெயரையோ தம் மனைவியின் பெயரையோ வெளிப்படையாகச் சொல்லமாட்டார்கள். மனைவியும் தன் கணவனின் பெயரைச் சொல்வதில்லை. மனைவி தன் கணவனின் பெயரைச் சொல்லாத வழக்கம் தமிழரிடையேயும் உண்டு. அங்காமி நாகர்கள் அதற்குக் கூறும் காரணம் ஆராயத்தக்கதாகும். தன் பெயரைச் சொன்னால், தன் பெயரையே திருப்பித்திருப்பி எப்போதும் சொல்லிக் கொண்டிருக்கும் ஆந்தையைப்போலக் கருத நேரும் என்று பெயரைச் சொல்வதில்லை என்று கூறுவர். இதுபோல் பிலிப்பைன் தீவிலும் பெயரைச் சொல்லாததற்குக் காரணம் கூறுகின்றனர். ஆனால் இங்கு ஆந்தைக்குரிய இடத்தில் காக்கையைக் கூறுகின்றனர். காக்கையானது 'கா கா' என்று அதன் பெயரையே திருப்பித்திருப்பிச் சொல்கின்றது என்று கூறுவர். தமிழில் ஊமன் என்ற ஆந்தையின் பெயர் திருப்பித்திருப்பித் தன் பெயரையே சொல்வதாகக் கருதினதால் தோன்றியிருக்கலாம். தமிழரில் மனைவியர் கணவரின் பெயரைச் சொல்லாதிருப்பதற்கும் இதுவே காரணமாகலாம். நாகரிகம் அமைந்தபோது இக்காரணம் மறைந்திருக்கலாம்.

ஆந்தையினத்தைப் பொதுவாக 'மூங்கா' என்ற பெயரால் மலையாளத்தில் அழைப்பர். மூங்கை என்ற சொல் தமிழில் ஊமையனையும் கீரிப்பிள்ளையையும் குறித்து வழங்கும். ஊமையைத் தமிழில் மூங்கை என்று அழைத்தது உயர்திணையில் காணப்படுகின்றது. ஆனால் மலையாளத்தில் ஊமனை மூங்கா என்று அழைத்தது அஃறிணையில் காணப்படுகின்றது. ஆந்தையைக் குறிக்கும் அஃறிணை மூங்கா தமிழில் வழக்கு இல்லை. ஊமனுக்குத் தலையில் இரு கொண்டைகள் உண்டு. அதனால் ஊமைக்கோட்டான் என்றழைப்பர். ஊமனை ஆங்கிலத்தில் (Brown fish owl) என்பர். பறவை நூலார் (Buba zeylonensis leschenault)என்றழைப்பர்.

சங்க நூல்களில் சில பாட்டுகளில் ஆண்டலை என்ற ஆந்தை வகையைப்பற்றிச் செய்தி காணப்படுகின்றது.

பிற்கால நூல்களிலும் இதைப்பற்றிச் சில செய்திகள் வருகின்றன.

"பசும்பிசி ரொள்ளழ லாடிய மருங்கின்
ஆண்டலை வழங்குங் கானுணங்கு கடுநெறி"

—பதிற்றுப்பத்து 25 : 7-8

"ஆண்டலைக் கின்ற பறழ் மகனே" —கலித்தொகை 94

"சாவோர்ப் பயிருங் கூகையின் குரலும்
புலவூண் பொருந்திய குராலின் குரலும்
ஊண்டலை துற்றிய ஆண்டலைக் குரலும்"

—மணிமேகலை, சக்கரவாள 75 - 77

"அழுகுரற் கூகையோ டாண்டலை விளிப்பவுங்"

—பட்டினப்பாலை 258

"நீண்டபலி பீடத்தி லரிந்து வைத்த
நெடுங்குஞ்சிச் சிரத்தைத்த னினமென் றெண்ணி
ஆண்டலைப் புளரருகணைந்து பார்க்கு மாலோ"

—கலிங்கத்துப்பரணி - கோயில் பாடியது 16

"ஊமக் கூகையு மோரியு முறழ் உறழ் கதிக்கும்
யாமத் தீண்டிவந் தாண்டலை மாண்பில வழைக்குந்"

—நீலகேசி, தரும 29

"கூகையோ டாண்டலை பாட ஆந்தை
கோடதன் மேற்குதித் தோட வீசி"

—திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகம் 3

"மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினு
மாண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர"

—திருமுருகாற்றுப்படை 226 - 227 வரிகள்

ஆண்டலை யென்றொரு பறவை பதிற்றுப்பத்து, பட்டினப்பாலை, கலித்தொகை ஆகிய நூல்களிலும் பிற்காலத்து நூல்களிலும் கூறப்படுவதைக் காணலாம். இஃது ஆந்தையினப் பறவை யென்பது மணிமேகலை சொல்வதிலிருந்து தெரிகின்றது. மணிமேகலையில் கூகையின் குரலும் குராலின் குரலும் கூறப்பட்டபின் ஆண்டலையின் குரல் கூறப்பட்டிருப்பதால் ஆண்டலையும் ஆந்தையினப் பறவையென்பதில் ஐயமில்லை. கூகையோடும் ஆந்தையோடும் ஆண்டலை சுடுகாட்டில் வழங்குவதாகக் காரைக்காலம்மையார் கூறியிருப்பதிலிருந்தும் ஆண்டலை ஆந்தையினப் பறவை என்பது தெரிகின்றது. நீலகேசியில்

கூறும் செய்தியும் ஆண்டலை ஆந்தையினப் பறவை என்பதைக் காட்டுகின்றது. பட்டினப்பாலையும் கூகையோடு அதன் இனமான பறவையான ஆண்டலையைக் குறிப்பிட்டுள்ளது. ஆண்டலை ஆந்தையினப் பறவையாயின் அஃது எந்த வகை ஆந்தையென்று கண்டுபிடிக்க வேண்டும். ஆண்டலை என்பது ஆண்மகன் தலைபோன்ற தலையையும் புள்ளினைப்போன்ற உடலையுமுடைய ஒரு பறவை, இது பாலைக்குரியது என்று பதிற்றுப்பத்தில் உரை கூறப்பட்டிருப்பதைக் கவனிக்க வேண்டும். பேய் முதலியன பலியை நுகராமல் தலை ஆண்மகன் தலையும், உடல் புள்ளின் வடிவமுமாக எழுதின கொடி என்று திருமுருகாற்றுப்படை கூறுகின்றது. காளிக்குப் பலியாக அறுத்து வைத்த ஆண்மகன் தலையைத் தன்னுடைய இனமென்று கருதி ஆண்டலைப்புள் அருகே அணைந்து பார்த்ததாகக் கலிங்கத்துப்பரணி கூறுகின்றது. கலித்தொகையில் (94) 'ஆண்டலைக்கீன்ற பறழ்மகனே' என்ற வரியில் ஆண்டலைப்புள் கூறப்பட்டுள்ளது, குறளனுடைய தலை உடலைப் பார்க்கில் பெரிதாகத் தெரிவதால் ஆண்டலை பெற்ற மகனே என்று கலித்தொகையில் கூறப்பட்டுள்ளது. பறவையினத்தில் ஆந்தையென்ற பறவையே மனிதரைப்போலத் தலையையுடையதென்று பறவை நூலாசிரியர் கருதுவர். ஆந்தையின் கண்கள் மனிதரின் கண்கள்போல் முகத்தில் பொருந்தி முன்னோக்கி உள்ளன. பறவைகளில் ஆந்தைதான் மனிதனைப்போலக் கண்ணைச் சிமிட்டுகின்றது. கண்ணின் மேலிமையை மூடித் திறக்கும் திறன் மனிதனுக்கு இருப்பதுபோல ஆந்தைக்கும் இருக்கின்றதென்று பறவை நூலார் கூறுவர். ஆந்தையின் முகம் மனிதனுடைய முகத்தைப்போல் இருப்பதாக ஓர் அறிவியல் பேரறிஞர் (T. H. Huxley) கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். வீடுகளின் அருகில் காணப்படும் ஆந்தை உற்றுப்பார்ப்பதும் தலையைத் திருப்புவதும் மனிதரைப்போல இருப்பதாகப் பறவை நூலார் கூறுவர். உடலைத் திருப்பாமலே தலையைத் திருப்பிப் பார்க்கும் திறன் பறவையினத்தில் ஆந்தைக்குத்தான் இருக்கின்றதென்பர். இந்தக் காரணங்களால்தான் காட்டில் வாழும் ஒருவகை ஆந்தையை ஆண்டலையென்று அழைத்தனர் என்று தெரிகின்றது.

ஆண்டலையென்ற பறவை எதுவாயிருக்குமென்று கண்டறியக் கன்னடத்திலும் தெலுங்கிலும் வழங்கும் பெயர்கள் துணைபுரிகின்றன. ஆண்டலையென்ற பெயருடன் ஒப்புமையுடைய சில பெயர்கள் கன்னடத்திலும், தெலுங்கிலும் உள்ளன. ஆடெலு என்ற பறவைப் பெயர் கன்னடத்திலும்

தெலுங்கிலும் காணப்படுகின்றது. ஆடெலு என்பது கூகை யையும் இரவிலே காணப்படும் ஒருவகை வல்லூறையும் (Night hawk) குறிக்குமென்று டாக்டர் கிட்டெலின் (Dr. Kittel) கன்னட அகராதி கூறுகின்றது. ஆடெலு என்ற பெயர் ஆண்டலைப் பெயருடன் ஒத்திருப்பதை டாக்டர் எமனோ எடுத்துக்காட்டியுள்ளார். ஆண்டெ, ஆண்டெகா என்ற பெயர்களும் கன்னடத்திலும், தெலுங்கிலும் இதே பொருளைக் குறிக்குமென்பதையும் கிட்டெல் அகராதியிலிருந்து தெரிந்து கொள்ளலாம். ஆண்டே என்ற கன்னட, தெலுங்குப் பெயரை ஆந்தையென்ற தமிழ்ப் பெயர்க்கு ஒப்புமையாக டாக்டர் எமனோ காட்டியுள்ளார். ஆனால் ஆடெலு, ஆண்டே ஆகிய சொற்களை ஆண்டலையுடன் தொடர்புடையதாகக் கொள்வதே பொருத்தமானது. தெலுங்கு, கன்னட வழக்குப்படி ஆண்டலை கூகையையாவது, இரவில் காணப்படும் வல்லூறை யாவது குறிக்க வேண்டும். கூகையைப்பற்றிச் சங்க நூல் களில் செய்திகள் பல உள்ளன. ஆதலின் ஆண்டலை கூகை யாகாது. இராவில் வழங்கும் வல்லூறு இயற்கையில் இல்லை. ஆதலின் வல்லூறு போன்ற ஆந்தையையே இரவில் வழங்கும் வல்லூருகக் கருதியிருக்கலாம். இத்தகைய ஆந்தை வகை இயற்கையில் உள்ளது. இதை ஆங்கிலத்தில் வல்லூறு ஆந்தை (Hawk – owl) என்றழைப்பர். இஃது உருவில் வல்லூறு போல இருக்கும். அடர்ந்த காடுகளில் காணப்படும். ஆண்டலைப் பெயரை ஆராய்ந்ததிலிருந்து ஆண்டலை என்ற பறவை ஆந்தையினப் பறவை யென்பதும் வல்லூறு போன்ற தென்பதும் தெரிகின்றது. இந்த ஆந்தையை மலையாளத்தில் புள்ளுநத்து என்று நாட்டு மக்கள் அழைக்கின்றனர். தமிழில் சின்ன ஆந்தை என்று பொதுவாக அழைக்கின்றனர். நத்து என்ற பெயர் மலையாளத்திலும் சில இடங்களில் தமிழிலும் சிறிய ஆந்தையைக் குறித்து வழங்கும். புள்ளுநத்து என்ற பெயரில் வரும் புள்ளு என்ற பெயர் மலையாளத்தில் குறிப்பாக வல்லூறுகளைக் குறிக்கும். செம்புள்ளு, சிறுபுள்ளு, காயல் புள்ளு ஆகிய மலையாளப் பெயர்கள் சிலவகை வல்லூறுகளைக் குறித்து வழங்குவதைக் காணலாம். ஆதலின் புள் என்ற சொல் மலையாளத்தில் வல்லூறைக் குறிக்கின்றது தெளி வாகும். புள்ளுநத்து என்ற பெயர் வல்லூறைப் போன்ற சிறிய ஆந்தை என்று பொருள்பெறும். இந்தப் புள்ளுநத்தே ஆண்டலையாகும். சிலப்பதிகாரத்தில் ஆண்டலைப்புள் உச்சி யைக் கொத்தி மூளையைக் கடிக்கும் என்று அடியார்க்கு நல்லார் கூறியிருப்பது வல்லூறு போன்ற பறவைக்கே பொருத்தமாகும். ஆண்டலை இரவிலே வழங்கும் பறவை என்று

தமிழ் நூல்கள் கூறுவதால் இஃது இரவில் வழங்கும் வல்லூறு போன்ற ஆந்தை என்பது தெரிகின்றது. இத்தகைய ஆந்தை தமிழ்நாட்டிலும் கேரள நாட்டிலும் மரங்களடர்ந்த காடுகளில் காணப்படுகின்றது. மரங்களடர்ந்த காடு தீய்ந்துபோன கடியவழியில் ஆண்டலை வழங்கியதாகப் பதிற்றுப்பத்து கூறிய தைக் கவனிக்க வேண்டும். இந்த ஆண்டலையை புராணப் பறவையென்று பிற்காலத்தில் கருதினர். ஆண்மகனின் தலையோடு ஒப்பிட்டுக் கூறியதால் புராணப் பறவையாக்கினர். ஆண்டலையென்பது உண்மையான பறவை என்பதில் ஐயமில்லை. இந்த ஆண்டலையை ஆங்கிலத்தில் Hawk - owl என்பர். பறவை நூலார் Ninox Scutalata Hirsuta என் றழைப்பர்.

இந்த ஆண்டலைப்பறவை யெழுதின கொடியை வேலன் வெறியாட்டில் திருமுருகாற்றுப்படை கூறுவதாக உரையாசிரி யர்கள் கொண்டனர். ஆனால் இந்த ஆண்டலை வெறும் ஆண் மகன் தலையோடு வரைந்த படமாகலாம். ஏனென்றால் இன்றும் இத்தகைய வேலன் வெறியாட்டுப் போன்ற சடங்குகள், விழாக்கள் வடமலபாரில் நடக்கின்ற இடங்களில் மனிதனின் மண்டையோட்டுப் படம் போட்ட கொடிகள் தொங்கவிடப்படுகின்றன. வேலன் வெறியாட்டுச் சடங்கும் திருமுருகாற்றுப்படை கூறும் சடங்கு போலவே பல முறையிலும் ஒத்து வருதலால் இந்த ஆண்டலைக் கொடியும் இப்போது வட மலபாரில் பயன்படுத்தும் மண்டையோட்டுப் படக் கொடியே யென்பதில் ஐயமில்லை. இதை ஆண்டலைப்புள் கொடி யென்றோ, கோழிக் கொடியென்றோ, மயில் கொடியென்றோ உரையாசிரியர்கள் கூறினது தவறு என்று கருதவேண்டும். ஆண்டலையடுப்பு முதலிய சொற்கள் ஆண்மகன் மண்டை யோட்டைக் குறித்தே மதுரைக் காஞ்சியிலும் பிற்காலத்து நூல் களிலும் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். ஆண்மகனின் தலை போலிருந்ததால் ஒருவகைக் காட்டு ஆந்தைக்கு ஆண்டலை என்று பெயர் வைத்ததுபோலப் பெண்மகள்போலக் கண்களும் முகமும் உடையதான தேவாங்கை 'மகண்மா' என்று பெயரிட் டழைத்ததையும் எண்ணிப்பார்க்க வேண்டும். இதை 'அடவி மனுஷலு' என்று கன்னடத்தில் காட்டு மனிதன் என்ற பொருளில் அழைப்பதையும் காணலாம்.

(தொடரும்)

# சொல் ஆராய்ச்சி

[மயிலை சீனி வேங்கடசாமி]

'கருவொடு பெயரிய இல்'

பத்துப்பாட்டில் ஏழாம் பத்தாக உள்ள நெடுநல்வாடை, தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ் செழியன்மேல் நக்கீரர் பாடியது. போர் செய்யச் சென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் பாசறையில் தங்கிப் போர்ச் செயலில் ஈடுபட்டிருப்பதையும் அவனுடைய அரசி பாண்டி மாதேவி அரண்மனையில் இருந்து அரசனைப்பற்றிக் கவலைப் பட்டுக்கொண்டிருப்பதையும் நெடுநல்வாடையில் நக்கீரர் பாடுகிறார். அரண்மனையைக் கூறுகிற இடத்தில் நக்கீரர் 'கருவொடு பெயரிய காண்பின் நல் இல்' (அடி 114) என்று கூறுகிறார். இதில் கூறப்பட்ட கருவொடு பெயரிய இல் என்பது இப்போது நம்முடைய ஆராய்ச்சிக்கு உரிய பொருள்.

உரையாசிரியர் நச்சினார்க்கினியர், 'கருவொடு பெயரிய இல்' என்பதற்குக் கருப்பக்கிருகம் என்று பொருள் எழுதி யுள்ளார். "கருவொடு பெயரிய காண்பு இன் நல் இல்— புதைத்த கருவோடே பெயர்பெற்ற காட்சிக்கினிய நன்றாகிய இல். என்றது கருப்பக்கிருக மென்றவாறு" என்பது அவர் கூறுகிற உரை. நச்சினார்க்கினியர் சங்ககாலத்துக்கு மிகப் பிற்காலத்தில் இருந்தவர் என்பது தெரிந்ததேயாகும்.

அண்மைக்காலத்தில் வெளிவந்த நெடுநல்வாடைப் புதிய உரையிலும் 'கருவொடு பெயரிய இல்' என்பதற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையே தரப்பட்டுள்ளது. 'கருவொடு பெயரிய காண்பு இன் நல் இல்—கருவோடே பெயர்பெற்ற காட்சிக்கு இனிய நன்றாகிய இல்' என்று பொருள் கூறி, அதன் அகல உரையில் 'கருவொடு பெயரிய இல் என்பது கருப்பக்கிருகம் என்றவாறு' என்று விளக்கங் கூறப்பட்டுள்ளது.

அரண்மனைக்குக் கர்ப்பக்கிருகம் என்னும் பெயர் எக் காலத்திலும் வழங்கியதில்லை. ஆனால், நச்சினார்க்கினியர் அரண்மனையைக் கர்ப்பக்கிருகம் என்று கூறுகிறார். இஃது எவ்வாறு பொருந்தும்? திருக்கோயில்களில் தெய்வத் திருமேனிகள் எழுந்தருளியுள்ள இடத்துக்குக் கர்ப்பக்கிருகம் என்று பெயர் உண்டு. இந்தக் கர்ப்பக்கிருகம் என்னும்

பெயரும் அண்மைக்காலத்தில் வழங்கப்பட்டது. கர்ப்பக்கிருகம் என்னும் வடமொழிப் பெயர் வழங்குவதற்கு முன்பு அகநாழிகை, உண்ணாழிகை என்னும் தமிழ்ப் பெயர்கள் வழங்கி வந்தன. இப் பெயர்களைக் கல்வெட்டெழுத்துச் சாசனங் களில் காண்கிறோம். கி. பி. 7ஆம் நூற்றாண்டிலிருந்த அப்பர் அடிகளும் கோயிற் கருவறையை உண்ணாழிகை என்று கூறியுள்ளார்.

> "அண்ணாமலை யமர்ந்தார் ஆரூர் உள்ளார்
> அளப்பூரார் அந்தணர்கள் பாடக் கோயில்
> உண்ணாழிகையார் உமையாளோடும்
> இமையோர் பெருமானார் ஒற்றியூரார்"
> (திருவீழிமிழலைத் திருத்தாண்டகம், 3)

அகநாழிகை, உண்ணாழிகை என்னும் பெயர்களை மாற்றிக் கர்ப்பக்கிருகம் என்னும் வடமொழிப் பெயர் வழங்கப்பட்டது மிக மிகப் பிற்காலத்திலாகும். மேலும், கர்ப்பக்கிருகம் என்னும் சொல் கோயில் கருவறைக்கு வழங்கப்பட்டதேயல்லாமல் அரண்மனைக்குக் கர்ப்பக்கிருகம் என்னும் பெயர் வழங்கிய தில்லை. ஆனால், நச்சினார்க்கினியர் அரண்மனையைக் கருப்பக் கிருகம் என்று கூறுகிறார். இஃது எவ்வாறு பொருந்தும்? இவர் கூறியது தவறு என்று எனக்குத் தோன்றியது. அரண் மனைக்குக் கர்ப்பக்கிருகம் என்னும் பெயர் வழங்கியதை நான் கண்டதில்லை. நச்சினார்க்கினியர் இவ்வுரையில் தவறு செய்திருக்கிறார் என்பது தோன்றுகிறது. அப்படியானால் 'கருவொடு பெயரிய இல்' என்பதற்குச் சரியான பொருள் என்ன? இந்தக் கேள்விக்குறி என் மனத்தில் சில ஆண்டு களாக இருந்தது. அண்மையில் சில நாட்களுக்கு முன்பு தான் இதற்கு விடை கண்டேன். இந்த விடை, திராவிட இனமொழியான கன்னட மொழியிலிருந்து கிடைத்தது!

கன்னடம், தமிழ்மொழியைப் போலவே மிகப் பழைய மொழி. வடமொழிக் கலப்பு கன்னடத்தில் ஏற்படுவதற்கு முன்பு கன்னடமும் தமிழும் ஒரே மொழியாக இருந்தன. அதனால்தான் பழங்கன்னட மொழியில் மிகப் பழைய தமிழ்ச் சொற்கள் காணப்படுகின்றன. கடைச்சங்ககாலத்தில் வழங்கி வந்து பிற்காலத்தில் வழக்கு வீழ்ந்துபோன பல தமிழ்ச் சொற்கள் பழங்கன்னட மொழியில் இருப்பதை இன்றுங் காண்கிறோம். ஹளெ கன்னட (பழைய கன்னட) மொழியில் எழுதப்பட்ட பழைய இலக்கிய நூல்கள் இன்றும் உள்ளன. இந்தப் பழைய கன்னட நூல்களில் முற்காலத்தில் வழங்கி

வந்த பல பழைய சொற்களும் காணப்படுகின்றன. ஆகவே, 'கருவொடு பெயரிய இல்' என்பதற்குச் சரியான, நேரான பொருள் பழங்கன்னட இலக்கியத்தில் கிடைக்கும் என்று கருதி ஆராயத் தொடங்கினேன். நற்காலமாக நான் தேடிய பொருளைக் காணப் பெற்றேன். மட்டிலா மகிழ்ச்சி யடைந்தேன்.

கருமாட (கருமாடம்) என்னுஞ் சொல் பழங்கன்னடத்தில் வழங்கி வந்துள்ளது. கருமாடம் என்பதற்குப் பெரிய வீடு என்பது பொருள். கரு - பெரிய. மாடம் - மாடிவீடு. மாடி வீடு, கருமாடம் என்று பழங்கன்னடத்தில் வழங்கப்பட்டிருந்தது, பழைய கன்னட மொழிப் புலவர்கள் இச்சொல்லைத் தங்கள் நூல்களில் வழங்கியுள்ளார்கள். கன்னட ஆதி கவிகளில் பம்ப என்பவர் ஒருவர். இவர் இயற்றியுள்ள கன்னட பாரதத்துக்குப் பம்ப பாரதம் என்பது பெயர். இந்தப் பாரதத்தில் இவர் கருமாட (4, 10) என்னுஞ் சொல்லை ஆண்டிருக்கிருர். இந்தப் புலவர் இயற்றிய ஆதிபுராணத்திலும் கருமாட என்னும் சொல் (4, 25) ஆளப்பட்டுள்ளது. அபிநவ பம்ப என்னும் மற்ருெரு கன்னடப் புலவர் தம்முடைய இராமாயணத்தில் இக்கருமாடம் என்னுஞ் சொல்லை (3, 26 வசனம், 3, 28. 7, 62 வசனம். 10, 36 வசனம். 11, 149. 16, 71 வசனம்) ஆண்டுள்ளார். கன்னட ஜைமினி பாரதத்திலும் (6, 10, 11. 8, 5. 15, 5.) இச்சொல் வழங்கப்பட்டுள்ளது. இராஜசேகரி விலாசம் (13-1. வசனம்) கப்பிகர கெய்பிடி என்னும் கன்னட நூல்களிலும் கருமாடம் என்னுஞ் சொல் காணப்படுகிறது.

கருமாடம் என்னுஞ் சொல் பிற்காலத்தில் கருவாடம் என்றும் திரிந்து வழங்கப்பட்டுள்ளது. மகரம் வகரமாகத் திரிகிற மரபுப்படி கருமாட என்பது கருவாட என்று திரிந்தது. எடுத்துக்காட்டாக: தாமரெ (தாமரை) என்பது தாவரெ என்றும் சமண என்பது சவண என்றும் கமுகு என்பது கவுங்கு என்றும் சிமுட்டு (கண் சிமுட்டுதல்) என்பது சிவுட்டு என்றும் திரிந்ததுபோலக் கருமாட என்பது கருவாட என்று பிற்காலத்தில் திரிந்து வழங்கிற்று.

இந்தச் சான்றுகளினுலே கருமாடம் என்னும் சொல் உண்டென்பதும் அதன் பொருள் மாடிவீடு என்பதும் நன்கு தெரிகின்றன. எனவே, நக்கீரர் தம்முடைய நெடுநல் வாடையில் கருவொடு பெயரிய இல் என்னும் தொடருக்கு அவர் கருதிய சொல் கருமாடம் அல்லது கருமாடி என்பது ஐயமறத்

தெளிவாகத் தெரிகிறது. கருமாடம் என்னும் சொல் பிற்காலத்தில் தமிழ்நாட்டில் வழக்கொழிந்துவிட்டபடியால், மிகப் பிற்காலத்தவரான நச்சினுர்க்கினியர், இச்சொல்லுக்குக் கர்ப்பக்கிருகம் என்று தவருன, பொருத்தமற்ற உரையை எழுதி விட்டார் என்பது நன்கு தெரிகிறது.

பழந்தமிழகத்தில் வழங்கிவந்த கருமாடம் அல்லது கருமாடி என்னுஞ் சொல் பிற்காலத்தில் மறைந்துவிட்டாலும், திராவிட இனமொழியாகிய கன்னடத்தில் இச்சொல் இலக்கிய நூல்களில் இன்றும் நின்று நிலவுகின்றது.

கருமாடி என்னுஞ் சொல் தமிழ்நாட்டில் இலக்கிய வழக்கில் மறைந்துபோனுலும் இச்சொல் பேச்சு வழக்கில் நெடுங்காலம் வழங்கி வந்திருக்கிறது. பேச்சு வழக்கில் மட்டும் இருந்தபடியால் இச்சொல் சிதைந்து வழங்கிற்று. கருமாடி என்பது பேச்சு வழக்கில் கருமாறி என்று திரிந்து விட்டது. சில ஊர்களில் கருமாறியம்மன் என்னும் பெயருள்ள காளி (கொற்றவை) கோயில்கள் உள்ளன. கருமாடியம்மன் என்பதே கருமாறியம்மன் என்று திரிந்து வழங்குகிறது என்பது தெளிவு. பெரிய மாடமாக அஃதாவது பெரிய கோயிலாக அமைந்த ஆலயத்தில் எழுந்தருளியுள்ள அம்மன் என்பது இதன் கருத்து. அல்லது, கருமாடமாகிய அரண் மனேயில் அமைந்த அம்மன் கோயில் என்பது இதன் கருத் தாகும். கருமாடி என்னுஞ் சொல் கருமாறி என்று பிற்காலத்தில் திரிந்துவிட்டது என்பதை அறிகிருேம்.

காஞ்சிபுரத்தில் காமாட்சியம்மன் கோயில் குளக்கரையின் மேல் ஒரு கருமாடி உண்டு. அது மூன்று நிலேயுள்ள மாடக் கோயில். அக்கருமாடியில் இப்போது நின்ருன் இருந்தான் கிடந்தான் என்னும் பெயருள்ள மூன்று திருமால் திருவுரு வங்கள் எழுந்தருளியுள்ளன. முற்காலத்தில் இந்தக் கருமாடியில் மூன்று புத்த உருவங்கள் (நின்ருன் இருந்தான் கிடந்தான் என்னும் அமைப்பில்) இருந்தன என்று புராணங் களினுல் அறிகிருேம். இந்தக் கருமாடி, பிற்காலத்தில் கருமாறி என்று திரிந்து வழங்கப்பட்டது. இடைக்காலத்தில், உற்சவகாலத்தில், இந்தக் கருமாடியின் மேல்தளத்திலிருந்து குளத்தில் குதிப்பது ஒரு காட்சியாக நடைபெற்றது. அக் காட்சியை மக்கள் திரண்டு வந்து கண்டனர். அதற்குக் கருமாறிப் பாய்ச்சல் என்பது பெயர். கருமாடிப் பாய்ச்சல் என்பது தான் கருமாறிப் பாய்ச்சல் என்று தவருக வழங்கப்பட்டது.

14 அல்லது 15ஆம் நூற்றுண்டில் இருந்தவரான காளமேகப் புலவர் கருமாறிப் பாய்ச்சலைக் கூறுகிருர். அவர் காலத்தில் காஞ்சிபுரத்தில் இருந்த ஆறு சிறப்புச் செய்திகளை அவர் கூறுகிருர். அவர் கூறிய செய்யுள் இது :

''அப்பா குமரகோட்டக் கீரை, செவிலிமேட்
டுப் பாகற்காய், பருத்திக்குளநீர்—செப்புவா
சற் காற்றுக், கம்பத்தடியில் தவம், கருமா
றிப் பாய்ச்சல் யார்க்கும் இனிது'' (தனிப்பாடல்)

காளமேகப் புலவர் காலத்தில் காஞ்சிபுரத்துக் குமர கோட்டத்துக் கொல்லையில் விளைந்த கீரையும் செவிலிமேட்டுக் கொல்லையில் விளைந்த பாகற்காயும் சுவையாக இருந் தனவாம். இப்போதும் மண்வளம் குன்ருமல் அவை சுவையாக இருக்கின்றனவா என்பது தெரியவில்லை. பருத்திக்குளம் இப்போது பாழடைந்துள்ளது. ஆகையால் அதன் நீர் இனிமையாக இருக்க முடியாது. செப்புவாசல் என்பது செப்பினுல் செய்யப்பட்ட கோபுரவாயில். அங்குச் சென்று தங்கினுல் காற்று இனிமையாக வீசிற்ரும். அந்தச் செப்பு வாசல் இப்போது இல்லை. கம்பத்து அடியில் தவம் என்பது திருவேகம்பத்தில் உமையம்மையார் தவம் செய்தார் என்னும் புராணக்கதை. இந்தக் காட்சியை இன்றும் ஏகாம்பர ஈசுவரர் கோயிலில் காணலாம். கருமாறிப்பாய்ச்சல் என்பது, காமாட்சி யம்மன் குளக்கரைமேல் உள்ள கருமாடி என்னும் மாடக் கோவிலின் உச்சியிலிருந்து குளத்தில் குதித்துப் பாய்வது. கருமாடிப் பாய்ச்சல் என்பது காளமேகப் புலவர் காலத்தில் கருமாறிப் பாய்ச்சல் என்று வழங்கப்பட்டது.

கருமாடிப் பாய்ச்சலைக் கருமாறிப் பாய்ச்சல் என்று நாலாயிரத் திவ்வியப் பிரபந்த வியாக்கியானமும் கூறுகிறது. கருமாடி என்னும் சொல்வழக்கு கி. பி. 14, 15ஆம் நூற்றுண்டு களில் மாறுபட்டுக் கருமாறி என்று வழங்கியதை இதனுல் அறிகிருேம்.

இதுகாறும் ஆராய்ந்தவற்ருல் மறைந்துபோன ஒரு சொல்லை யறியப்பெற்ருேம். 'கருவொடு பெயரிய இல்' என்று நெடுநல்வாடையில் நக்கீரர் கூறியது, நச்சினுர்க்கினியர் தம்முடைய உரையில் கூறியதுபோலக் கர்ப்பக்கிருகம் அன்று என்பதும் அதன் பொருள் கருமாடி என்பதும் அறிந்தோம். கருமாடி என்பது அரண்மனையின் மாடிவீடு என்றும் அறிந்தோம். அன்றியும், கோயில் கட்டட வகைகளில்

ஒன்ருன மாடக்கோயிலேயும் கருமாடி என்று வழங்கினுர்கள் என்பதையும் கண்டோம். மிக மிகப் பிற்காலத்தில் கருமாடி என்பது கருமாறி என்று திரிந்து வழங்கியதையும் கண்டோம்.

### தோகை

இனி, தோகை என்னுஞ் சொல்லேப்பற்றி ஆராய்வோம். தோகை என்னுஞ் சொல் மிக மிகப் பழைமையானது. இக் காலத்தில் வழக்கிழந்துபோன இந்தச் சொல் பழைய இலக்கியங்களிலும் சங்கச் செய்யுட்களிலும் காணப்படுகிறது. தோகை என்னும் சொல்லுக்கு மயில் என்றும் மயிற்பீலி (மயிலின்வால்) என்றும் பொருள் உண்டு. இப்பொருள்களில் இந்தச் சொல் சங்க இலக்கியங்களில் வழங்கப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாகச் சிலவற்றைக் காட்டுவாம்.

'குடுமி நெற்றி நெடுமாத் தோகை காமர் கலவம் பரப்பி' (அகம், 194), 'காமர் பீலி ஆய் மயில் தோகை' (அகம், 378) 'தோகை மாட்சிய மடந்தை' (ஐங்குறு. குறிஞ்சி மஞ்ஞைப் பத்து. 3) 'எரிமருள் வேங்கை இருந்த தோகை இழையணி மடந்தையிற் ரேன்றும்' (ஷை 4) 'விரிந்த வேங்கைப் பெருஞ் சினைத் தோகை பூக்கொய் மகளிரிற் ரேன்றும்' (ஷை 7.) 'கொடிச்சி கூந்தல்போலத் தோகை அஞ்சிறை விரிக்கும் பெருங்கல் வெற்பு' (ஷை 10.) 'அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை மேக்கெழு பெருஞ்சினை இருந்த தோகை பூக்கொய் மகளிரில் தோன்றும்' (குறும். 26.) 'கறங்கிசை வெரீஇப் பறந்த தோகை அணங்குடை வரைப்பகம் பொலிய வந்திறுக்கும்' (அகம். 266.)'பறைக்கட் பீலித் தோகைக் காலின் துளுநாடு' (அகம். 15.) 'அணிநிற இரும்பொறை மீமிசை மணிநிற உருவின தோகையு முடைத்தே' (ஐங்குறு. முல்லே. புறவணிபத்து. 1.)

குறமகளிர் தினைப்புனத்தைக் காவல் காத்தனர். தினைக் கதிர் முற்றினபோது ஆடவர் வந்து கதிரை அறுத்தார்கள். அப்போது காவல் காத்த குறமகளிரும் தோகையும் (மயிலும்) கிளியும் அவ்விடத்தை விட்டு அகன்று விட்டனர் என்று பெருங் கதை கூறுகிறது. 'பொன்னேர் சிறுதினை விளைந்த புனந் தோறும் சாயலுங் கிளவியும் தம்மொடு நிகர்த்த தோகையும் கிளியும் தொக்கவை அகல' (இலாவாண காண்டம், மாசன மகிழ்ந்தது, 115-118). மேலும் அந்நூல் 'தோகையும் கிளியும் துன்னல் செல்லா' என்று கூறுகிறது. (உஞ்சைக் காண்டம், பாலே நிலங் கடந்தது. 45) 'தூவி மஞ்ஞை தோகை விரித் தகவ' (உஞ்சைக் காண்டம், ஊர் தீயிட்டது. 194).

மயிற் பறவைக்குத் தோகை என்னும் பெயர் வழங்கியதைக் கண்டோம். மயிலின் வாலுக்கும் தோகை என்று பெயர் வழங்கியதையுங் கண்டோம். நாயின் வாலுக்கும் தோகை என்று பெயர் வழங்கியுள்ளது. நாயின் வாலைத் தோகை என்று பரணர் கூறுகிறார். 'வலஞ் சுரித் தோகை ஞாளி மகிழும்' என்று (அகம் 122) அவர் இச்சொல்லை வழங்கியுள்ளார். வலமாக வாலைக் குழைக்கும் நாய் குரைக்கிறது என்பது இதன்பொருள். இதில் நாயின் வாலைத் தோகை என்று கூறியுள்ளது காண்க. நாயின் வாலைத் தோகை என்று கூறியுள்ளபடியால், ஏனைய விலங்குகளின் வாலையும் தோகை என்று அக்காலத்தில் வழங்கினார்கள் போலும். பழங்கன்னட மொழியில் விலங்குகளின் வாலைத் தோகை என்று வழங்கி வந்தனர். கன்னட மொழியில் தோகெ என்றால் வால் என்பது பொருள். மிகப் பழங்காலத்தில் தோகை என்னுஞ் சொல் விலங்குகளின் வாலுக்குப் பெயராக வழங்கப் பட்டிருக்க வேண்டும் என்பது தெரிகிறது. பிறகு, தோகை என்னுஞ் சொல் சிறப்பாக மயிலின் வாலைக் குறிக்க வழங்கப்பட்டது. பிறகு ஆகு பெயராய் மயில் பறவையைக் குறிக்கும் சொல்லாக வழங்கப்பட்டது என்பது தெரிகின்றது.

விலங்குகளின் வாலுக்கும் மயிலின் வாலுக்கும் பெயராக வழங்கி வந்த தோகை என்னுஞ்சொல், முற்றாத நெற்கதிருக்கும் பெயராக வழங்கி வந்துள்ளது.

> *''வளவயல்*
> *அழல்நுதி யன்ன* **தோகை** *யீன்ற*
> *கழனி நெல்லின் கவைமுதல் அலங்கல்''* —*அகம்.* 13

என்று பெருந்தலைச் சாத்தனார் கூறுகிறார். பெருங்கதை என்னும் நூலை இயற்றிய கொங்கு வேளும் தம்முடைய நூலில் இச்சொல்லை இப்பொருளில் வழங்கியுள்ளார். எருமை ஒன்று கதிர்விட்ட நெல் வயலில் புகுந்து சென்றதைக் கூறுகிற இடத்தில் இச்சொல்லை ஆள்கிறார். 'தோகைச் செந்நெல் சவட்டி' என்பது அவர் வாசகம். (மகத காண்டம், மகத நாடு புக்கது, 18)

எனவே தோகை என்னுஞ் சொல்லுக்கு விலங்குகளின் வால், மயிலின் வால், முற்றாத நெற்கதிர் என்னும் பொருள்கள் உள்ளன என்பதை அறிகிறோம்.

திராவிட இனத்தைச் சேர்ந்த துளுமொழியில் சோகெ என்றும் ஸோகெ என்றும் ஒரு சொல் வழங்குகிறது. இது தோகை என்னுஞ் சொல்லின் திரிபு. பனை தென்னை கமுகு

ஈந்து முதலான புறக்காழ் மரங்களின் ஓலைகளுக்குப் பெயராகத் துளு மொழியில் சோகெ என்னுஞ் சொல் வழங்கப்படுகிறது. எனவே தமிழ் கன்னடம் துளு முதலான திராவிட இன மொழி களில் தோகை என்னும் சொல் வழங்கப்பட்டன என்பதும் இச்சொல்லின் பொருள் விலங்குகளின் வால், மயிலின் வால், முற்றாத நெற்கதிர், பழுக்காத ஓலை என்பதும் தெரிகின்றன.

தூவி

தூவி என்னும் இன்னொரு பழந்தமிழ்ச் சொல்லை ஆராய் வோம். பறவைகளின் இறகுக்குப் பெயராகத் தூவி என்னுஞ் சொல் வழங்கப்பட்டது. பருந்தின் உதிர்ந்த இறகை (தூவியை) அம்பின் பின் புறத்தில் கட்டுவது வழக்கம்.

*"முது பாறு*
*இறகு புடைத்திற்ற பறைப்புன் தூவி*
*செங்கணை செறித்த வன்கண் ஆடவர்"* —*நற்றிணை. 329*

என்று மதுரை மருதங்கிழார் மகனார் சொகுத்தனார் கூறுகிறார். அன்னப் பறவையின் இறகும் தூவி எனப்பட்டது. 'அனிச் சமும் அன்னத்தின் தூவியும் மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம்' என்று திருக்குறள் கூறுவது காண்க. அன்னப் பறவை யின் தூவியினால் தலையணைகள் அமைக்கப்பட்டன. அன்னத் தூவியின் தலையணைமேல் ஒருவர் சாய்ந்திருந்ததைப் பெருங் கதை கூறுகிறது.

*"வாவிப் புள்ளின் தூவி விம்மிட*
*அணைமிசை யசைந்த அம்மென் சிறுபுறம்."*

*(உஞ்சைக் காண்டம், வென்றி யெய்தியது 135-136) (வாவிப்புள் - அன்னப் பறவை.)*

மயிலினுடைய இறகும் தூவி என்று கூறப்பட்டது. 'தோகைத் தூவித் தொடைத்தார் மழவர்' (அகம், 249) 'தூவி மஞ்ஞை தோகைவிரித் தகவ' (பெருங்கதை. உஞ்சைக் காண்டம், ஊர் தீயிட்டது 194). இந்தச் சான்றுகளைக் கொண்டு பறவைகளின் இறகுக்குத் 'தூவி' என்னும் பெயர் வழங்கப்பட்டதை யறிகிறோம். எருதின் வால் குஞ்சத்தைத் 'தூவி' என்று திருநாவுக்கரசர் கூறுகிறார். சிவபெருமான் நீண்ட வாலை (தூவியை)யுடைய எருதை ஊர்தியாகக்கொண் டுள்ளார் என்று அவர் கூறுகிறார்.

*"நீறேறு திருமேனி நின்மலனை நெடுந்தூவி*
*ஏறேறும் பெருமானை என்மனத்தே வைத்தேனே"*
—*திருவேகம்பம்-5*

என்று பாடியுள்ளது காண்க. 'நெடுந்தூவி ஏறு' என்று இவர் கூறியது நீண்டவாலின் நுனியில் உள்ள மயிர்க் கொத்தை உணர்த்துகிறது. இதனால் அடர்ந்த குச்சு மயிருக்குத் தூவி என்னும் பெயர் வழங்கப்பட்டதை யறியலாம்.

தூகி

விவிலிய வேதத்தின் பழைய ஏற்பாட்டில் கூறப்படுகிற சாலமோன் என்னும் அரசன் கி.மு. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவன். அவ்வரசன் தன்னுடைய நாவாய்களைக் கடல் வழியாக அனுப்பிப் பல பண்டங்களை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்தான் என்றும் அப்பண்டங்களில் பொன், வெள்ளி, யானைத் தந்தம், குரங்குகள், மயில்கள் முதலிய பொருள்களும் இருந்தன என்றும் விவிலிய நூல் கூறுகிறது. ஈபுரு மொழியில் எழுதப்பட்டுள்ள அந்த நூலில் மயில் தூகி என்று கூறப்படுகிறது. தோகை என்னும் தமிழ்ச் சொல்லே ஈபுரு மொழியில் தூகி என்றாயிற்று என்று டாக்டர் கால்டுவெல் ஐயர் தாம் எழுதிய 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்னும் நூலில் (1915ஆம் ஆண்டுப்பதிப்பு பக்கம் 89-91) முதன்முதலாகக் கண்டு எழுதியுள்ளார். தோகை என்னும் தமிழ்ச்சொல் அல்லது திராவிட மொழிச்சொல் ஈபுரு மொழியில் தூகி என்றாயிற்று என்று அவர் கூறியது சாலப் பொருத்தமாகும். தோகை என்பது மயிலின் பெயர் என்பதை மேலே கண்டோம்.

ஒரு வேளை, தூவி என்னுந் தமிழ்ச் சொல்லே ஈபுரு மொழியில் தூகி என்றாயிற்று என்றுங் கருதலாமோ ? மயிலின் இறகுக்கும் தூவி என்னும் பெயர் வழங்கிற்று என்பதைக் கண்டோம். 'தோகைத் தூவித் தொடைத்தார் மழவர்' என்றும் 'தூவி மஞ்ஞை தோகைவிரித் தகவ' என்றும் மயிலின் தோகை தூவி என்று கூறப்பட்டதை மேலே கண்டோம். எனவே தூவி என்னுஞ் சொல் ஈபுரு மொழியில் தூகி என்றா யிற்று என்றுங் கருதலாம்.

தோகையே தூகி என்றாயிற்று என்றாலும் தூவியே தோகையாயிற்று என்றாலும் இரண்டும் ஒன்றே. ஏனென்றால் தோகையும் தூவியும் தமிழ்ச்சொற்கள், அல்லது திராவிட இன மொழிச் சொற்கள். ஆகவே ஈபுரு மொழி விவிலியம் கூறுகிற தூகி தமிழ்நாட்டிலிருந்து அல்லது திராவிட நாட் டிலிருந்து ஏற்றுமதியான பொருள் என்பதில் ஐயமில்லை.

———

## தணிகைமணி
## டாக்டர் வ. சு. செங்கல்வராய பிள்ளை
## திருமுறைப் பரிசு இரண்டாம் விழா

சைவ சித்தாந்த சங்கம் தணிகைமணி டாக்டர் வ. சு. செங்கல்வராய பிள்ளை யவர்கள் பெயரில் நிறுவியுள்ள திருமுறைப் பரிசுச் சொற்பொழிவின் இரண்டாம் விழா 2-4-72 ஞாயிறன்று மறைமலையடிகள் நூல் நிலையத்தில் அமைந்துள்ள வள்ளலார் திருவருள் மண்டபத்தின்கண் காலையிலும் மாலையிலும் நடைபெற்றது. இம்முறை கோவை, கவியரசு புலவர் கு. நடேச கவுண்டர் பி.ஓ.எல். அவர்கள் 'அப்பர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும்' என்ற தலைப்பில் ஆற்றிய ஆராய்ச்சிச் சொற்பொழிவைக் காலை மாலை இருவேளையும் நிகழ்த்தினர்.

இவ்விருவேளை விழாவிற்குக் கவியோகி சுத்தானந்த பாரதியார் தலைமை தாங்கினார். தமிழகப் பள்ளிக் கல்வி இயக்குநர் திரு. சை. வே. சிட்டிபாபு எம்.ஏ., எல்.டி. அவர்கள் இச் சொற்பொழிவு நூலை வெளியிட்டார்கள். இந்து அறநிலைய ஆட்சித்துறை முன்னாள் ஆணையர் திரு. அ. உத்தண்டராமன் ஐ.ஏ.எஸ் (ஓய்வு) அவர்கள் சொற்பொழிவாளருக்கு ரூ. 500 பரிசுத்தொகை வழங்கிப் பாராட்டினார்கள். முதுபெரும் புலவர் மே. வீ. வேணுகோபால பிள்ளை அவர்கள் கழகப் பணியைப் பாராட்டிப் பேசினர்.

விழாவிற்கு வருகைதந்த அனைவரையும் வரவேற்றுப் பேசிய தாமரைச்செல்வர் திரு வ. சுப்பையா பிள்ளை அவர்கள் தணிகைமணி யவர்கள் பெயரில் சங்கம் பரிசுச் சொற்பொழிவு ஏற்படுத்திய வரலாற்றை எடுத்துக் கூறினார்கள். முதல் சொற்பொழிவை 21-11-69இல் நேரிலேயே வந்திருந்து கேட்டு மகிழ்ந்த தணிகைமணி யவர்கள் இரண்டாம் சொற்பொழிவைக் கேட்க இல்லாதுபோனது வருத்தத்திற்குரியது என்றார்கள். டாக்டர் தணிகைமணி யவர்கள் திருமுறைகளுக்குச் செய்துள்ள ஒளிநெறி, ஒளிநெறிக் கட்டுரைகள் இதுவரை வேறு யாரும் செய்யாதது மட்டுமன்றிப் பல்கலைக் கழகங்கள் பலபேரை வைத்துச் செய்யவேண்டிய பணியுமாகும் என்றார்.

விழாவிற்குத் தலைமை தாங்கிய கவியோகி சுத்தானந்த பாரதியார் அவர்கள் சித்தாந்த சைவத்தின் சிறப்பை எடுத்துக்

கூறினார்கள். "சைவசித்தாந்தக் கழகந்தான் சைவத்திற்கும் தமிழுக்கும் தொண்டு செய்கிறது. அதன் கருவூலங்களை யெல்லாம் மக்களுக்கு வாரிவழங்கியவர் சுப்பையா பிள்ளை தாம். புலவர்களைத் தூண்டித் தூண்டி எழுதச்செய்து நூல்களை வெளியிட்டுள்ளார். அவர்கள்தாம் தணிகைமணியவர்களின் ஒளிநெறி நூல்களை அச்சிட்டுள்ளார்கள். வேறு யாராவது இருந்தால் இது என்ன பட்டியல் என்று தூக்கிப் போட்டு விடுவார்கள்.'

சைவ சித்தாந்தம்தான் உண்மையான சமயம். விவேகானந்தர் அமெரிக்காவிற்குச் செல்வதற்கு முன் சைவ சித்தாந்தத்தை அறிந்துகொள்ள முடியாமல் போயிற்றே என்று வருந்தினார். அவர் திரும்பி வந்தபின் சோமசுந்தர நாயகரைச் சந்தித்தார். நாயகர் சைவத்தின் பெருமையை நிலைநாட்ட மூன்று கேள்விகள் விவேகானந்தரிடம் கேட்டார். அவரால் விடை கூற முடியவில்லை. சைவ சித்தாந்தத்தை அறிந்துகொண்டால்தான் இவைகளுக்கு விடை கூற முடியு மென்று அதன் தத்துவத்தை எடுத்துக் கூறினார்.

சைவ சித்தாந்தம் என்பது இயற்கையான சமயம். கிறித்துவம், பௌத்தம், முகமதியம் போன்ற எல்லா சமயங் களுமே '(Personality cult)' தனியொருவர் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டவை. ஏசுவில்லாவிட்டால் கிறித் துவம் இல்லை. புத்தர் இல்லாவிட்டால் பௌத்தம் இல்லை. நபி இல்லாவிட்டால் முகமதியம் இல்லை. ஆனால் சைவம் அப்படிப்பட்ட சமயம் இல்லை. கடவுளை அடிப்படையாகக் கொண்ட சமயம் இது. இயற்கையை வைத்து எழுந்தது சிவம்.

அப்பர் பல இன்னல்களுக் காட்பட்டபோதும்கூடச் சிவனையே சிந்தித்திருந்தார். தாம் இருக்குமட்டும் நல்ல தெளிவுடனே, நல்ல கருத்துடனே இறைவனை எண்ணி எண்ணி உருகி அவன் மயமானவர். இறவா உடல் மட்டு மல்ல இறவா உயிர் மட்டுமல்ல இறவாத் தன்மை பெற்றவர், அமரத்தன்மை பெற்றவர் அப்பர்."

அடுத்ததாக 'அப்பர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும்' என்ற கவியரசு நடேச கவுண்டரவர்கள் எழுதிய நூலைக் கல்வி இயக்குநர் திரு. சை. வே. சிட்டிபாபு அவர்கள் கழகத்தையும் கவியரசு கவுண்டரவர்களையும் நூலையும் பாராட்டிப் பேசினார்கள்.

“பைந்தமிழுக்காக, கன்னித்தமிழுக்காக, செந்தமிழுக்காகத் தங்களுடைய வாழ்நாளையெல்லாம் அர்ப்பணித்த திருவரங்கம் பிள்ளையவர்களுடைய இளவல் தாமரைச்செல்வர் சுப்பையா பிள்ளையவர்கள் பிறமொழியைப் புறக்கணிக்காதவர்கள். மறைந்த மலைபோன்ற மறைமலையடிகளார் வடமொழியும் ஆங்கிலமும் நன்கு பயின்றவர்கள். அதனால்தான் தம் கருத்துக்களைத் தெளிவாக எழுதியுள்ளார்கள்.

நான் பள்ளியில் படிக்கும் காலத்திலேயே ஏதாவது நல்ல தமிழ் நூல் படிக்க எடுத்தால் அது கழக வெளியீடாகத்தான் இருக்கும். இவ்வாறு 52 ஆண்டுக்காலமாக சற்றும் தணியாது, சலிக்காது, பற்றேடு தமிழ்த்தாய்க்காகத் தாமரைத்திரு பிள்ளையவர்கள் ஆற்றி வருகின்றுர்கள்.

அப்பரைப் பற்றிய ஆராய்ச்சி நூலை யெழுதியுள்ள கவியரசு அவர்கள் அந்தக்காலத்திலே தமிழை நன்கு படித்து அதில் தோய்ந்த புலவராவர். அவர் கையாண்டுள்ள நடை மிக அழகாகவுள்ளது. அவர் காட்டியுள்ள ஆய்வுத்திறன் மிக மிக அற்புதமாகவுள்ளது. இவ்வளவு பெரிய புலவர்களை யெல்லாம் ஒரே சங்கப்பலகையில் அமையவைக்கும் ஆற்றல் கழகத்திற்குத்தான் உண்டு. இதற்குக் காரணம் திரு. சுப்பையா பிள்ளையவர்கள்தாம். அவர் மூச்செல்லாம் இக் கழகத்தை இன்னும் மென்மேலும் வளர்க்க என்னென்ன செய்யவேண்டும் என்று திட்டமிடுவதிலேயே உள்ளது எனலாம். இம்மண்டபத்தை அமைத்து இதில் நாமெல்லாம் கூடி மகிழச்செய்தவர்கள் அவர்தாம். குறிப்பாகச் சொல்லப் போனல் இன்று கழகம் எந்தெந்த வகையிலெல்லாம் தன் சீரிய சேவைகளைத் தமிழ்த்தாய்க்காகச் செய்திருக்கிறது என்பதைச் சற்று நினைத்து நினைத்து உள்ளுந்தொறும் உள்ளுந்தொறும் மகிழவேண்டிய ஒரு பெரு நிலை இருக்கிறது.

அவர்களுக்கு என்னுலியன்ற உதவிகளையெல்லாம் கல்வி இயக்குநர் என்ற வகையில் செய்ய விழைகிறேன். பல்லாவரத்திலுள்ள அரசினர் உயர்நிலைப் பள்ளிக்கு மறைமலையடிகளாரின் பெயரை வைக்க வேண்டுமென்று அவர்கள் சொன்னுர்கள். அதற்கான முயற்சிகள் எடுக்கப்பெற்று விரைவில் அப்பெயர் மாற்றம் வரும் என்பதை மட்டும் இங்கே கூற விரும்புகிறேன்.

வெறும் இலக்கியத் துறையில் மட்டும் கழகம் தன் சேவையை நிறுத்திக்கொள்ளவில்லை. குழந்தைகளுக்காகக்

குழந்தை இலக்கியங்களை வெளியிட்டிருக்கிறார்கள். ஆங்கில இலக்கியங்களை வெளியிட்டிருக்கிறார்கள். திறனாய்வு நூல்களை வெளியிட்டிருக்கிறார்கள்.

அப்பரைப் பற்றி இவ்வளவு சிறப்பான ஆராய்ச்சியைச் செய்து தங்களுடைய திறனாய்வுத்திறனைக் கவியரசு நடேச கவுண்டரவர்கள் காட்டியிருக்கின்றார்கள். நல்ல வகையில் அதைப் பாகுபடுத்தி ஆராய்ச்சி, இலக்கிய நலம், திறனாய்வு என்று தனித்தனியாகக் கொடுத்துள்ளார்கள். கவுண்ட ரவர்கள் தமிழ்க்கடலில் தோய்ந்து தோய்ந்து அதிலேயே ஆழ்ந்து திளைப்பவர்கள்.''

பின்னர்க் கவியரசு கு. நடேச கவுண்டரவர்கள் 'அப்பர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும்' என்ற தலைப்பில் பரிசுச் சொற்பொழிவை நிகழ்த்தினார்கள்.

அப்பர் வரலாற்றில் சில ஆராய்ச்சிக் குறிப்புக்களை அவர்கள் முதலில் விரித்துரைத்தார்கள். அப்பர் மாணிக்க வாசகருக்குப் பிற்பட்டவர்போல் பொருள்படக் கூடிய வகையில் 'நரியைப் பரி செய்வானும்' என்ற தொடர் அவர் தேவாரத்தில் வந்திருப்பதை எடுத்துக்கூறி அது மணிவாசகப் பெருமானுக்காகச் சிவபெருமான் செய்த திருவிளையாடலைக் குறிப்பதாகப் பலர் எண்ணக்கூடும். ஆனால் அப்படி அதற்கு மட்டும் அப்பொருளை எடுத்துக்கொண்டால் அதை யடுத்து வரும் பிற வரிகளுக்கு உண்மையான பொருள்களைக் காண முடியாது என்றார். அதனால் அந்த அடிக்கும் மணிவாசகப் பெருமானுக்கும் எவ்விதத் தொடர்புமிருக்க முடியாது என்றார்.

பின்னர் அப்பர் பெருமானின் பாடல்களிலிருந்து இலக்கியச் சுவைமிக்க பகுதிகளை எடுத்துக்காட்டி அவற்றில் அமைந்துள்ள எதுகை மோனைத்தொடை நயங்களையும் செய்யுள் நலங்களையும் பாராட்டிப் பேசினார்.

சைவ சித்தாந்தத்தின் கருப்பொருள்களான பதி, பசு, பாசங்களைப் பற்றி அப்பர் தேவாரத்தில் ஆங்காங்கு பொதிந்துள்ள கருத்துக்களைத் தொகுத்துத் தந்து அவற்றுக்குள்ள இயைபுகளைப் பொருத்திக் காட்டினார்கள்.

கழகப் பணிகளைப் பாராட்டி முதுபெரும் புலவர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள் பேசினார்கள். ''இன்று பெரும் புலவரவர்கள் பல அரிய கருத்துக்களை எடுத்து

விளக்கியுள்ளார்கள். இப்படிப்பட்ட வாய்ப்பு நமக்கு அடிக்கடி நேரத்தகுந்த முறையில் அறிஞர் பிள்ளையவர்கள் இத்தகைய குழுக்களைக் கூட்டி அறிஞர்களுக்குத் தேனீக்கள் போன்ற வர்களாய புலவர் பெருமக்கள் பலவேறு மலர்களில் சென்று ஈட்டிய துளித்துளியான மதுவை ஒருசேரக் கூட்டி அதை அனுபவிக்க வைப்பதற்கு அளித்துத் தானும் அனுபவிப்பது போன்ற தேன்வண்டைப்போல அவர்கள் புலவர் பெருமக்கள் சேகரித்து வைத்திருக்கின்ற செந்தேனனைய இன்பக் கருத்துகளை இத்தகைய குழுக்களிலே கேட்டுப் பலரும் மகிழ்ந்து அதனாலே ஒரு நலனையடையும் தன்மையையும் இந்தப் பெரிய அமைப்புவாயிலாக அவர்கள் செய்துதர வேண்டுமென ஒரு வேண்டுகோளை விடுகின்றேன்.

கழகம் தோன்றிய நாள்தொட்டு இன்றுவரை என்னுடைய பெருமதிப்புக்குரிய நிறுவனம். இன்று அது வளர்ந்துள்ள பெரிய நிலைக்குக் காரணமாகத் தொண்டாற்றிய வர்களை எண்ணி அவர்களை நாம் பின்பற்றவேண்டும். சாதாரணமான நிலையில் தொடங்கப்பட்ட நிறுவனம் இன்றைக்குப் பெரிய ஆல்போல் தழைத்துப் பல்லாயிரக் கணக்கான அறிவுப்பறவைகள் தன்னிடத்தே வந்து அமர்ந்து இன்பம் கொள்ளத்தக்க முறையிலே நடைபெற்று வருகின்றது என்று சொன்னால் அதற்கு முதற்கண் நம்முடைய வணக்கத்திற்கும் நம்முடைய வாழ்த்திற்கும் உரியவர்கள் திருவாளர் திருவரங்கம் பிள்ளை அவர்கள். அவர்களை அடியொட்டி அவர்களுடைய பெருமையெல்லாம் நாளும் சிறந்து வெற்றி கொள்ளத்தக்க முறையிலே அவர்களுக்கு வெற்றிக் கொடியாய்த் திகழ்கின்றவர்கள் இன்றைக்கிருக்கின்ற நம்முடைய சுப்பையா பிள்ளை அவர்கள். அவர்களுக்கு நம்முடைய நடுவணரசு 'தாமரைத் திரு' என்ற பட்டத்தைக் கொடுத்துச் சிறப்பித்திருக்கின்றது.

அவரை அறியாத மக்கள் தமிழ்நாட்டில் யாரும் இருக்க முடியாது. சிறிய நிறுவனத்தை மிகப் பெரிய நிறுவனமாக்கிச் செழிக்கத்தக்க பெருமை அவர்கள் ஒருவருக்கே உண்டு.

தமிழ் நூல்களைக் கையிலே எடுத்தால் ஓர் அகவுரவம் வருமோ என்று எண்ணிய காலம் ஒன்றிருந்தது. அதை மாற்றியவர் அவர்கள்தாம். கைக்கு அழகு செய்கின்ற அணிகலன்களாகவே நூல்கள் வெளியிடுவதைத் தங்களுடைய வாழ்க்கைக் குறிக்கோளாக வைத்துக்கொண்டு நடத்துகின்றவர் நம்முடைய பிள்ளையவர்கள்.

தணிகைமணி திருமுறைப் பரிசு
இரண்டாவது சொற்பொழிவு விழா
2 - 4 - 1972



கோவைக் கவியரசு கு. நடேசகவுண்டரவர்கள்
சொற்பொழிவாற்றுதல்



பள்ளிக் கல்வி இயக்குநர் திரு. சை. வே சிட்டிபாபு அவர்கள்
சொற்பொழிவு நூலை வெளியிட்டுப் பாராட்டுதல்

மாமன்னன் இராசராச சோழன் சிலைத் திறப்பு விழா (13 - 4 - '72)



மாண்புமிகு கல்வி அமைச்சர் டாக்டர் நாவலர் தலைமையில், தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் கருணாநிதி அவர்கள் மாமன்னன் இராசராச சோழன் சிலையைத் திறந்துவைக்கிறார்.

தமிழ் நூல் செல்வத்தை எல்லோரும் எய்தும் வகையில் நல்ல முறையில் எல்லோரும் பெற்றுக் களிக்கத்தக்க வகையில் இந்த நிறுவனம் ஒன்றைத் தவிர்த்து வேறு நிறுவனம் ஒன்று தமிழ்நாட்டில் இருப்பதாக எனக்கு உணர இயலவில்லை. தமிழுக்கு ஆக்கம் தேடிய பதிப்பாளர்களுள்ளே சிறந்த பதிப்பாளராக அமைந்திருக்கின்றவர்கள் இந்த நிறுவனத்தார்!''

கவியரசுப் பெருமானவர்களுக்குப் பரிசுத்தொகையான ரூ. 500ஐ திரு. அ. உத்தண்டராமன் அவர்கள் வழங்கி அப்பெருமானின் சொற்பொழிவைப் பாராட்டினர். ''புலவரவர்களுடைய திறனய்வு மிக நன்ருயிருக்கிறது. இதைப்போல இன்னும் பல திறனய்வு நூல்களைப் புலவரவர்கள் எழுத வேண்டும். ஒவ்வொரு தேவாரத்திற்கும் தனித்தனியாகத் திறனய்வு செய்யலாம். நண்பர் சுப்பையா பிள்ளை அவர்கள் நல்ல புலவர்களைக் கொண்டுதாம் நூல்களை எழுதச் செய்கிருர்கள். பல பெரிய புலவர்களை அவர்கள் நமக்குக் காட்டியதற்குப் பிறகுதான் நாம் அவர்களைப்பற்றி யெல்லாம் தெரிந்துகொண்டிருக்கிறேம்.''

கழக ஆட்சியாளர் அவர்கள் நன்றி கூறியபின் விழா இனிது முடிந்தது.

---

## எங்கும் உள்ள கடவுள் ஒருவனே

சைவசமயத்தினுல் அறிவுறுத்தப்படும் சிவம் எல்லாப் பொருளுங் கடந்ததாய் உண்மையறிவின்ப வடிவாய் எல்லா ஆற்றலுமுடையதாய் எல்லாவற்றையுமறிவதாய்ப், பிறப்பிறப்புக்களிற் படாத தூய அருண்மேனியுமுடையதாய்த் திகழ்வதென்று அறிமின்கள்! இவ்விலக்கணங்களெல்லாம் ஒருங்குடைய அப்பெரும்பொருளைச் சிவம் என்றழைக்க நுங்கட்கு விருப்பமில்லையாயின் நாராயணன் என்றழைமின்கள்! பிரமனென்றழைமின்கள்! புத்தனென்றழைமின்கள்! அருகனென்றழைமின்கள்! எப்பெயரிட்டு எவ்வெவ்வாறு அழைப்பினும் அப்பெயரெல்லாம் அவற்குப் பொருந்தும். வெறும் பெயரிலே நுங்கட்குப் போர் நிகழ வேண்டாம். எங்கும் உள்ள கடவுள் ஒருவனே.

—சைவசித்தாந்த ஞானபோதம் பக். கO௬.

## தமிழ்மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணரின் தமிழர் வரலாறு

'கற்றேன்றி மண்டோன்றாக் காலத்தே வாளொடு
முற்றேன்றி மூத்த குடி'

என்று புறப்பொருள் வெண்பா மாலையில் கரந்தை வீரன் கூறுவதாகப் பா உள்ளது. 'வெட்சி நிரை கவர்தல்' 'மீட்டல் கரந்தை' தன்னுடைய ஆநிரையைப் பகைவன் கவர்ந்து கொள்ள அதை மீட்பதற்கு ஆர்த்தெழும் தமிழ் மறவன் தன் குடிப்பெருமையையே இவ்வாறு எடுத்துக் கூறுகிருன். பறிபோன தன் ஆநிரையை மீட்பதற்காக அத்தமிழ் மறவன் அன்று அச்சூளுரைத்தான். பறிபோன தன் மானத்தை, குலப்பெருமையை, தாய்மொழி மாட்சியை மீட்பதற்காக இன்று தமிழ்மக்கள் இச் சூளுரை எடுத்துக்காட்டாகக் கூறி வருகிருர்கள். இதை இன்று தமிழரே எள்ளி நகையாடு கின்றனர். சென்னையில் நடைபெற்ற உலகத் தமிழ்க் கருத் தரங்கில் தமிழ்க் கட்டுரை படிப்போர்க்கு அனுப்பப்பெற்ற அறிவிப்பில் மேற்கண்ட மேற்கோள் கொடுக்கப்பெற்று அதனடியில் இதுபோன்ற 'தக்க ஆதாரமில்லாத தற் பெருமை யான கூற்றுக்கள், எதையும் அறிவியல் அடிப்படையில் ஆராய்ந்து பார்க்கும் நம்முடைய தகுதியிலும் திறமையிலும் அவநம்பிக்கைதான் ஏற்படச் செய்யும்' என்று கொடுக்கப் பெற்றிருந்தது. இதிலிருந்து கருத்தரங்கத்தார்க்கு இக்கூற்றில் எவ்வளவு அவநம்பிக்கை என்பது தெரிகிறது.

இச்சொற்றெடரை அன்று அத் தமிழ் மறவன் தனக்கு உயர்ந்த பதவி வேண்டுமென்றே அல்லது ஆளவந்த வேற்றினத்தாரிடம் மாறுபட்டோ, அல்லது தேர்தலில் நின்று வெற்றி பெற்று அமைச்சர் பதவி பெற வேண்டுமென்றே கூறவில்லை. தன் குடிப்பெருமையைத் தன்மானத்துடன் அவன் கூறியுள்ளான்.

அக் கூற்று 'எதையும் அறிவியல் அடிப்படையில் ஆராய்ந்து பார்க்கும் தம்முடைய தகுதியில் அவநம்பிக்கை ஏற்படச் செய்யுமாம்'. எது அறிவியலடிப்படை அந்த இரண்டு வரிகளுக்கு மேலே ஒருவரி சென்று பார்த்தால் எது அறிவிய லடிப்படை என்பது புலப்படும்.

"வையகம் போர்த்த வயங்கொலி நீர்-கையல" என்பதே அந்த அடி. இந்நிலவுலகு தோன்றுதற்கு முன் 'இவ்வையகம் முழுவதையும் கடல்நீர் போர்த்திருந்தது' என்று அக்கரந்தை

வீரன் கூறுகிருன். இஃது அறிவியல் உண்மைதானே? இன்று மேனுட்டு அறிவியல் அறிஞர்கள் இவ்வுண்மையை ஒத்துக் கொள்கிருர்களே. முதலில் ஒரே நீர்ப்பரப்பு: அதன் பின் மலே தோன்றியது. அதன் பின் சமவெளி தோன்றியது. இதுதான் அவர்களின் அறிவியல் கண்டு பிடிப்பு. இதைக் கரந்தை வீரன் கூறினுல் அறிவியல் அடிப்படை அற்ற உண்மையா? தமிழர்களே தமிழர்களின் முதுகில் குத்துகின்ற நிலே பரவலாக ஏற்பட்டு வரும் இச் சூழ்நிலேயில் தமிழ்மொழி ஞாயிறு, தனித்தமிழ் அறிஞர், மொழியியற் பேராசான் ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள் 'முதன் முதல் நாகரிக விளக் கேற்றி நானில முழுதும் அகவொளி பரப்பிய' தமிழர் தம் பெருமையை, உண்மை வரலாற்றை அண்மையில் வெளிவந்த 'தமிழர் வரலாறு' என்ற நூலில் எழுதியுள்ளார்கள்.

இந்நூலில் வீறுபெற்று வாழ்ந்த தமிழர் எவ்வாறு ஆரியர் வருகையால் சீர்கெட்டு, சிறப்பிழந்து, மொழிப்பற்று குறைந்து பண்பாடு குலேந்து இன்று ஆரிய அடிவருடிகளாய் வாழ் கின்ருர்கள் என்பதைப் பாவாணர் அவர்கள் தக்க சான்று களோடு விளக்கியுள்ளார்கள்.

இந்நூலில் முன்னுரை நீங்கலாக 'தனிநிலேக் காண்டம்' 'கலவு நிலேக் காண்டம்' 'தெளி நிலேக் காண்டம்' என்ற மூன்று காண்டங்கள் உள்ளன. இவற்றுள் 'தனி நிலேக் காண்டம்' என்பது ஆரியர் இந்தியாவிற்குள் வருவதற்குத் தமிழன் வாழ்ந்த பல்வேறு நிலேகளே விளக்குவது. 'கலவு நிலேக் காண்டம்' ஆரியர் தமிழருடன் கலந்து அவர்களிடையே சாதி வேறுபாட்டை விளேவித்து அரசர்களே ஆரிய அடிமைகளாக்கிய வரலாற்றைக் கூறுகிறது. தெளி நிலேக் காண்டம் தமிழர் கட்கு மீண்டும் தம் இனத்தின்மீதும் மொழியின் மீதும் பற்று ஏற்பட்ட வரலாற்றை விளக்குகின்றது.

முதல் காண்டமான தனிநிலேக் காண்டத்தில் பாவாணர் அவர்கள் கற்காலம் (தோரா. கி.மு. 5,00,000) தொட்டு ஆரியர் இந்தியாவிற்குட் புகுந்த கி.மு. 1500 வரை வாழ்ந்த தமிழர்களின் சிறப்புக்களே எடுத்து விரித்துள்ளார்கள். இப் பகுதியில் மறைந்த இலெமூரியா என்னும் குமரிக்கண்டம் இருந்ததுபற்றித் தக்க சான்றுகளுடன் விளக்கியுள்ளார்கள்.

குமரிக்கண்டம் என்ற ஒன்று இருந்ததில்லே என்றும் அவ்வாறு இருந்ததாகத் தமிழர்கள் தற்பெருமைக்காகக் கூறி வருகிருர்கள் என்றும் சில தமிழ் வரலாற்றறிஞர்களே கூறி வருகின்றனர். இதுபற்றி மிக அண்மையில் வெளிவந்த இரு

பேரறிஞர்கள் கட்டுரைகளை இங்கு எடுத்துக் காட்டுவது பொருத்தமாக இருக்கும். சோவியத் அறிஞர் டாக்டர் ஏ. கோந்த்ரத்தோவ் என்பவர் எழுதிய கட்டுரை 'குமரி மலர்' சென்ற திங்களில் வெளிவந்துள்ளது. அதில் ''பூர்வீக-இந்திய நாகரிகத்தின் தோற்றம் அறிஞர்களுக்கு இன்னும் புதிராகவே உள்ளது. அந்த நாகரிகத்தை உருவாக்கியவர்கள் திராவிட மொழிகளையே பேசினர். ஆயினும் திராவிடர்கள் எங்கிருந்து வந்தனர் என்பது இன்னும் தெரியவில்லை என்றும் எழுதியுள்ளார். மேலும் 'லெமூரியா'வைப் பற்றிக் குறிப்பிட்டு, ஒரு காலத்தில் இந்துஸ்தானத்துக்கும் ஆப்பிரிக்காவுக்கும் இடையே ஒரு நாடு-ஒரு பெரிய நிலப்பரப்பு-இருந்ததாகச் சிலர் கூறுகின்றனர். இந்த நிலப்பரப்பு பின்னர்க் கடலுக்குள் மூழ்கி விட்டது. கடலுக்கடியில் ஆராய்ச்சிகள் நடத்தினால், இப்போது கடலுக்குள் மூழ்கிப் போய்விட்ட நிலப்பரப்பு-இந்துஸ்தானத்தையும் ஆப்பிரிக்காவையும் இணைத்த நிலப்பரப்பு-உண்மையிலேயே லெமூரியாதானா என்பது தெரிய வரும்'', என்று எழுதியுள்ளார்.




டாக்டர் டி. கே. கோசு அவர்கள் கருத்துப்படி
ஆசியாவின் பழைய தோற்றம்

கடலுக்கடியில் ஆராய்ச்சிகள் நடத்தினால் இந்த உண்மைகள் வெளிப்படக்கூடும். யார் நடத்துவது இந்த ஆராய்ச்சியை? ஆரியர்கள் உயர்ந்த பதவிகளில் இருக்கும்

நடுவண் அரசோ அல்லது நடுவண் அரசுத் தொல் பொருள் துறையோ இதில் ஈடுபடவா போகிறது ?

கல்கத்தாவிலுள்ள நிலவியல் அளவைத் துறையைச் சார்ந்த டாக்டர். டி.கே. கோசு* என்பார் 'கண்டங்கள் நகர்ந்தபோது' என்ற கட்டுரையை 'சையின்சு ரிபோர்ட்டர்' என்ற இதழில் சென்ற திங்களில் எழுதியுள்ளார். இதில் பூமி இன்றிருப்பது போல் எப்பொழுதும் நிலையாயில்லை. ஒரு காலத்தில் ஆத்திரேலியா, ஆப்பிரிக்கா, இந்தியா போன்ற கண்டங்கள் ஒரே நிலப்பரப்பாய் இருந்தன என்பதை அறிவியல் அடிப்படையான பல சான்றுகள் காட்டி நிறுவியுள்ளார்.

இன்றைய இந்தியாவின் தென்பகுதியில் குமரிக்குத் தெற்கே பெரும் நிலப்பரப்பு இருந்திருக்க வேண்டுமென்றார் அவர். அப்பொழுது இமயமலை தோன்றவில்லை என்கிறார்.

'தமிழர் வரலாற்று நூலில் (பக். 3) பாவாணர், ஒரு பெருமலையானது மேலைக்கடலில் தொடங்கி வடக்குந் தெற்குமாகக் குமரிக்குத் தென்பகுதியிலுள்ள நிலப்பகுதியிலே நெடுந் தொலைவு சென்று பின் தென் மேற்காகத் திரும்பி 'மடகாசுக்கர்' என்ற ஆப்பிரிக்கத்தீவு வரை சென்றதாகத் தெரிகிறது என்று கா. சு. பிள்ளையின் கூற்றைச் சான்றாகக் காட்டுகிறார்.

ஏறத்தாழ இதே கருத்தை விளக்குவது போல் டாக்டர். கோசு அவர்களின் கீழ்க்கண்ட வரிகள் அமைந்துள்ளன. 'Madagascar consists like neighbouring Africa, of a platform of folded gneiss (course-granied rock) with a north-easterly direction of strike. India is also a flat platform of folded gneiss which is still visible in the old Aravalli and Korana mountains. Here also the strike directions are north-easterly as in Madagascar and Africa. There is another more recent fold in the mountains of Nellore and Vellakonda with north south strike which agrees with the later north south trend lines in Africa.'

இவ்வாறு அறிவியல் அடிப்படையில் புதிய ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ள மேனாட்டு, இன்னாட்டு, அறிஞர்கள் கூறி

---

*Dr. T. K. Ghosh - When the continents moved. Science Reporter. April 72 p 171-173.

வருகையில் மூன்ருண்டுகட்கு முன் சென்னைப் பல்கலைக் கழகத்தின் வழி வெளிவந்துள்ள 'A Social history of the Tamils' என்ற நூலின் 40ஆம் பக்கத்தில் கீழ்க்கண்ட வரிகள் குமரிக்கண்டத்தைப் பற்றி அந் நூலாசிரியரின் கருத்துக்களைப் புலப்படுத்துகின்றன.

"But it is idle to contend that this view is an imaginative creation on the part of Tamil scholars exclusively."

1969இல் சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு இக் கருத்தை ஆங்கிலத்தில் எடுத்து உலகுக்குப் பறை சாற்றுகின்ற போது 1972இல் பாவாணர் அவர்கள் தமிழில் தம் சொந்த வெளியீடாக வெளியிடும் நூலில் குமரிக் கண்டத்தை நிலை நாட்ட என்னமுயன்றும் ஏது பயன்? 'தமிழறிஞர்கள் மட்டுமே கொண்டுள்ள கற்பனைப் படைப்பான' லெமூரியாப் பரப்பினைப் பற்றி இன்று சோவியத் அறிஞரும் இந்திய நிலவியலறிஞரும் கூறும் கூற்றுக்களும் இப்படித்தானே? பாவாணர் அவர்கள் நூல் இறுதியில் கூறியுள்ளது போல 'எண்ணெயும் உண்மையும் இறுதியில் மேற்படும்' என்று அமைதியுறுவோமாக.

மேற்கூறப்பட்ட கருத்தைத் தொகுத்துப் பாவாணர் இந் நூலின் 132ஆம் பக்கத்தில் 'தமிழிலக்கியத்தில் கூறப்பட்டுள்ள முதற் கடல்கோள் இதுவே. ஆப்பிரிக்காவும் ஆத்திரேலியாவும் குமரி நாட்டினின்று அறவே பிரிந்து நெடுந் தொலைவு நீங்கி விட்டன' என்று கூறியுள்ளார்.

இனி 'கலவு நிலைக் காண்டத்தில்' ஆரியர்கள் இந்தியா விற்குட் புகுந்ததையும் தமிழகத்துள் நுழைந்து தமிழர் வாழ்வில் ஆரியத்தைப் புகுத்தி ஆரியப் பழக்க வழக்கங்களுக்குத் தமிழர்களை அடிமைப் படுத்தியதையும் தெளிவாக ஆசிரியர் எழுதியுள்ளார்கள்.

'பழங்குடிப் பேதைமை, மதப்பித்தம், கொடைமடம் என்னும் முக்குற்றம் ஒருங்குகொண்ட மூவேந்தரும், பகுத்தறிவைப் பயன்படுத்தாது பிராமணரை முற்றும் பின்பற்றிய தனல் கடைக்கழகக் காலத்தில், மதவியல் குமுகாயவியல் மொழியியல் என்னும் முத்துறையிலும், ஆரியம் மிக வேரூன்றி விட்டது. (பக். 248)

'தமிழ வேந்தரின் பொற் செல்வப் பெருக்கையும் ஏமாளித் தன்மையையுங் கண்ட பிராமணர், அவரிடமிருந்து இயன்ற

வரை பொன்னும் நிலமும் பறிக்கத் திட்டமிட்டுப் பதினறு தானங்கள் வகுத்துள்ளனர். (பக். 249)

தொழிலை அடிப்படையாகக் கொண்டு இனமாகப் பிரிந்து வாழ்ந்திருந்தாலும் செய்தொழிலில் உயர்வு தாழ்வு கருதாத தமிழரிடையே 'கட்டில் நிணக்கும் இழிசினன்' 'துடியெறியும் புலைய எறிகோல் கொள்ளும் இழிசினன்' என்று தொழிலைப் பற்றி அன்னரை இழித்துக் கூறும் பண்பு ஆரியச் சூழ்ச்சியால் ஏற்பட்டது என்று (பக். 253) விளக்கியுள்ளார்.

ஆரியராலேயே தமிழர் ஆட்சி வீழ்ந்ததைக் குறிப்பிட்டு மூவேந்தர்க்குள்ளும் ஓரளவு ஒற்றுமையிருந்த கடைக்கழகக் காலம் வரை, அயலார் தமிழ் நாட்டைக் கைப்பற்ற முடிய வில்லை. அதன் பின்னரே, ஒன்றன் பின் ஒன்ருகப் பல அயலாட்சிகள் தோன்றி, மூவேந்தரும் மறைந்தனர். அன்று மூவேந்தர் ஒற்றுமையைக் குலைத்த ஏதின் மாக்கள் கூட்டம் இன்றும் தமிழரிடையிருந்து ஒற்றுமையைக் குலைத்து வரு கின்றது.' (பக். 257)

நால்வரணத் தோற்றமும் விளக்கமும் என்ற தலைப்பில் 'குலங்கள் இயற்கையாகத் தொழில் பற்றியே தோன்றின' (பக். 274) 'அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நாற்பகுப்பையே பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் எனத் திரித்தனர் ஆரியப் பூசாரியர்'. (பக். 276) தமிழ் நால் வகுப்பிற்கும் ஆரியர் நால்வரணத்திற்கும் வேறுபாடு உண்டு என்பதும் விளக்கப்பட்டுள்ளது. (பக். 271)

மூன்ரும் பகுதியான 'தெளி நிலைக் காண்டத்தில்' அறிவியல் வளர்ச்சியாலும் மேனுட்டார் தொண்டாலும் தமிழர் தம் பழம் பெருமையையும் மொழிச் சிறப்பையும் உணர முடிந்து ஒரு தெளிநிலை பெற்றதை ஆசிரியர் விளக்குகிருர். தமிழன் முன்னேற்றத்திற்குள்ள தடைகளைக் காட்டி (பக். 357) அவற்றைக் கடந்து தமிழன் முன்னேறும் வழிகளைத் (பக். 347) திறம்பட விளக்கியுள்ளார். இத்தகு சிறப்பு மிக்க நூலைத் தமிழரனைவரும் படித்து அதிலுள்ள உண்மைகளை அறிந்து தெளிந்து இன்றுள்ள அடிமை நிலையிலிருந்து விடுபட்டு வேக மாக முன்னேறுதல் வேண்டும்.

—பூசம்

# இராசராச சோழன் சிலைத் திறப்பு விழா

தஞ்சைத் திருநகரில் சித்திரை முதல் நாள் (13-4-72) மாலை 6 மணியளவில், தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் அவர்கள் தலைமையில், தமிழ்ப் பெருமன்னன் இராசராச சோழன் சிலைத் திறப்பு விழா சீருஞ்சிறப்புமாக நடைபெற்றது. வேளாண்மைத்துறை அமைச்சர் மாண்புமிகு மன்னை ப. நாராயணசாமி அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்கள். தமிழக முதல்வர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள் மாமன்னன் சிலையைத் திறந்துவைத்து, சீரிய உரையாற்றினார்கள். அறநிலைத்துறை அமைச்சர் மாண்புமிகு மு. கண்ணப்பன், சிலம்புச்செல்வர் ம. பொ. சி., தவத்திரு குன்றக்குடி அடிகளார் ஆகியோர் சிறப்புரை ஆற்றினர்.

மாமன்னன் சிலையைத் திறந்து வைத்த டாக்டர் கலைஞர் அவர்கள் தமது உரையில்,

"பெருந்தலைவர்களைப்பற்றி எதிர்கால மக்கள் நன்கு தெரிந்துகொள்ள வேண்டும் என்னும் நோக்கத்துடன் தான் அவர்களுக்குச் சிலைகள் நிறுவுகின்றோம். இந்தச் சிலையை எதிர்கால மக்கள் பார்க்கின்றபோது இராசராசன் ஆட்சிக் காலத்தில் சோழப் பேரரசு எவ்வளவு சிறப்பாக விளங்கியது என்பதைத் தெரிந்து கொள்வார்கள். இந்தச் சிலையை இவன் கட்டிய பெரிய கோவிலுக்குள் அமைக்க நடுவண அரசு அனுமதியளிக்க மறுத்து விட்டது. எனவே,

*"கோவிலுக்குள் இந்தச் சிலையை வைக்க மைய அரசு மறுத்துவிட்டதால் இந்த இடத்தில் வைக்கப்பட்டுள்ளது."*

என்ற வாசகத்தையும் சிலையின் பீடத்தில் பொறித்து வைத்துள்ளோம்." என்று குறிப்பிட்டார்.

விழாவிற்குத் தலைமை தாங்கிய டாக்டர் நாவலர் அவர்கள் பெரிய கோவிலுக்குள் இராசராச சோழன் சிலை வைக்க முடியாமற்போனமைக்கு வருத்தம் தெரிவித்தார். பண்டைக் கோவில்களைப் பாதுகாப்பதில் தமிழக அரசுக்கு மிக்க அக்கறை உண்டு எனவும், அக்கோயில்களைத் தமிழக அரசிடம் ஒப்படைத்தால் அவை பாழ்படும் எனப் பேசப்படுவது தவறு என்றும் குறிப்பிட்டார்.

இரவு 8 மணியளவில் விழா மேடையில் முத்தமிழ்க் கலா வித்வ ரத்ன டி. கே. எஸ். சகோதரர்களின் இராசராச சோழன் நாடகம் நடைபெற்றது. பொதுமக்கள் பல்லாயிரக்கணக்கில் வந்து விழாவினைக் கண்டுகளித்தனர்.

வாழ்க இராசராச சோழன் புகழ். வெல்க தமிழக அரசின் தமிழ்ப்பணிகள்.

## தமிழாசிரியர் பெருமக்களுக்கு

### 52 ஆண்டுகளுக்குமேல் பதிப்புத்துறையில் பணியாற்றிப் பட்டறிவு பெற்ற கழக ஆட்சியாளர் வ. சுப்பையா பிள்ளை அன்போடு விரும்பித் தெரிவிப்பது

தமிழ் மாணவர்களைப் பண்படுத்தும் பொறுப்பு முற்றுந் தமிழ் ஆசிரியரிடமே உள்ளது.

எதிலும் தமிழ், எங்கும் தமிழ் என்ற நிலையை உணர்த்தும் பொறுப்பும் தமிழாசிரியரிடமே உள்ளது.

**தமிழுணர்ச்சியூட்டிய நால்வர்**

தமிழ், தமிழினம், தமிழ்நாடு என்னும் முத்திற உணர்வுகட்கு முதன்முதல் வித்திட்டவர் (மனோன்மணீயம்) பேராசிரியர் பெ. சுந்தரம் பிள்ளை அவர்கள் ஆவர்.

அவ்வுணர்வுகளை மேன்மேலும் பெருகச் செய்து வளர்த்தவர் களில் முதன்மையானவர்கள் தனித்தமிழ்த் தந்தை மறைமலையடிகளும் பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்களுமாவர்.

அம்மூவர் விழுமிய கருத்துக்களை அரசியலில் புகுத்தித் தமிழக அரசைக் கைப்பற்றியவர் பேரறிஞர் அண்ணு அவர்கள் ஆவர்.

இவர்கள் வகுத்த கொள்கைகளினின்றும் சிறிதும் பிறழாது இவர்களுடைய கருத்துக்களையும் நூல்களையும் வெளியிட்டுப் பரப்பி அவை என்றென்றும் நிலைக்கச் செய்யும் பணியினைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் முறையாக ஆற்றிவருகிறது.

மேலே குறிப்பிட்ட பெருமக்கள் மூவர் வகுத்த வழிநின்று இந் நாளில் நூல்கள் எழுதிப் பரப்பி வருபவர் மொழிப் பேரறிஞர் தேவநேயப் பாவாணர் ஆவர்.

எனவே, மேலே குறிப்பிட்ட பெரும்புலவர் நால்வர் எழுதிய தமிழ் உணர்வுமிக்க நூல்கள் இல்லாத வீட்டு நூலகமோ, பள்ளி நூலகமோ, பொது நூலகமோ தமிழ் நாட்டில் இருத்தல் கூடாது என்பதை முதற்கண் தமிழாசிரியர் ஒவ்வொருவரும் கட்டாயம் கருதவேண்டிய தாகும்.

அவை நூலகங்களில் இல்லாத குறையினையும், அவற்றை ஆசிரியர்களும் மாணவர்களும் படிக்காத குறையினையும் நீக்க வேண்டுவது தமிழாசிரியர்களின் தனிப்பெருங் கடமையாகும்.

**செந்தமிழ்ச் செல்வி**

மேலே குறிப்பிட்ட முத்திற உணர்வுகளைப் பெருக்குவதையே குறிக்கோளாகக் கொண்டு கழகம் 46 ஆண்டுகளாக நடத்திவரும் ‘செந்தமிழ்ச் செல்வி’ என்னும் திங்கள் இதழுக்குத் தொடக்க காலத்தில் 1200 க்கு மேற்பட்ட கையொப்பங்கள் இருந்தன.

பள்ளிகளும் நூலகங்களும் ஆண்டுக்காண்டு நூற்றுக் கணக்காகப் பெருகியும் பதினுயிரத்துக்கு மேற்பட்ட தமிழாசிரியர் பெருகியும் வரும் இக்காலத்தே 600 கையொப்பங்களே உள்ளன.

தமிழாசிரியர் ஒவ்வொருவரும் 'செந்தமிழ்ச் செல்வி'யைத் தத்தம் பள்ளிக்கு வரவழைத்து இந்த இழிவான நிலையினைப் போக்கவேண்டியது தமக்குரிய முதன்மையான கடமையல்லவா ?

## புத்தகங்களைக் கழக நிலையங்களில் வாங்குதல்

தமிழாசிரியர் தமக்கோ, தமது பள்ளி நூலகத்திற்கோ வாங்க விரும்பும் புத்தகங்களைச் சென்னை, நெல்லை, மதுரை, கோவை ஆகிய நான்கு தலைநகர்களிலுள்ள கழகப் புத்தக விற்பனை நிலையங்களிலே தான் வாங்குதல் வேண்டுமென்று உறுதிசெய்து கொண்டால், இதுகாறும் ஆயிரத்து நானூற்று ஐம்பது நூல்களை வெளியிட்டுள்ள கழகம் மேலும்மேலும் பல அரிய நூல்களை வெளியிடுவதற்கு வாய்ப்பேற்படும் என்பது தமிழாசிரியன்மார் கவனத்திற்குக் கொண்டுவரப் பெறுகின்றது.

கழகப் புத்தக விற்பனை பெருகுமானுல் கழகம் சென்னையில் நடத்திவருகிற பெரிய ஆராய்ச்சி நிலையமாகிய 'மறைமலையடிகள் நூல்நிலைய'மும், பல்லாவரத்தில் உள்ள 'மறைமலையடிகள் கலைமன்ற'மும் திருநெல்வேலியில் உள்ள 'சிவஞான முனிவர் நூல்நிலைய'மும், குமரகுருபரர் குழந்தைப் பள்ளி'யும், 'திருவள்ளுவர் புலவர் கல்லூரி'யும் மேன்மேலும் வளர்ச்சியுற்றுத் தமிழ் மக்களுக்குப் பெரும் பயன் விளைக்கும் என்பது உறுதி.

## புலவர் படங்கள்

மறைமலையடிகள் நூல்நிலையத்தில் முந்நூறுக்கு மேற்பட்ட பழம் புலவர் படங்கள் தொகுத்து வைக்கப் பெற்றிருக்கின்றன. (இனி ஒருவர் அவற்றைத் தொகுப்பது அரிது.) புலவர் படங்கள் நிரம்பிய அடியிற்கண்ட கழக வெளியீடுகள் ஒவ்வொரு பள்ளியிலும் கட்டாயமாக வாங்கி வைக்கப்பெறுதல் வேண்டும்.

1. கழக 1008 வது வெளியீட்டுவிழா மலர்
2. கழகத் திருவள்ளுவர் திருநாள் மலர்
3. கழகப் பொன்விழா மலர்
4. உரிமையின் பரிசு (காந்தி அடிகளின் பிரிவுச் செய்தி)
5. உலகப் பேரொளி (நேருப் பெருமகனுரின் பிரிவுச்செய்தி)
6. தமிழ்ப் பேரொளி (அறிஞர் அண்ணுவின் பிரிவுச் செய்தி)

இவற்றில் அச்சிடப் பெற்றிருக்கும் உலகப் பெருமக்கள் படங்களும், தமிழ்ப் பெருமக்கள் படங்களும், அறிஞர் பெருமக்கள் கட்டுரைகளும் மாணவர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் மிக்க மகிழ்ச்சி தருவனவாகும்.

புலவர் வரலாறு:

புலவர் கோவிந்தன் அவர்கள் எழுதிய சங்கப் புலவர் வரிசையில் 16 புத்தகங்களும், சங்க அரசர் வரிசையில் 6 புத்தகங்களும், திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அவர்கள் எழுதிய தமிழ்ப் புலவர் வரிசையில் 600க்கு மேற்பட்ட புலவர்களின் வரலாறுகள் அடங்கிய 30 புத்தகங் களும் கழகம் வெளியிட்டிருக்கிறது.

தமிழ் வளர்த்த புலவர் வரலாற்று நூல்களைத் தமிழாசிரியன் மார் தங்கள் பள்ளிகளில் கட்டாயம் வாங்கி வைத்தல் வேண்டும்.

புலவர் வரலாறுகளை மாணவர்கட்குச் சொல்லுதல்:

நாடோறும் வகுப்புக்களில் அன்றைக்குரிய பாடத்தைத் தொடங்குவதற்குமுன் சிறிது நேரம் பெரும் புலவர் ஒவ்வொரு வரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்களை மாணவர்கள் உவந்து கேட்குமாறு சொல்லிவைப்பின் மாணவர் உலகம் பழம்புலவர்களை மறக்காமல் இருத்தற்குச் செய்யும் சீரிய கடமையாகும்.

தனித்தமிழ்ப் புலவர் பட்டத் தேர்வுக்கு அடிகோலியவர் பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை ஆவர். அதனை நிறைவேற்றித் தந்தவர் பேராசிரியர் கா. நமச்சிவாய முதலியார் ஆவர். இவ்விரு பெருமக் களையும் தமிழாசிரியன்மார் தங்கள் இரு கண்களெனப் போற்றக் கடமைப்பட்டவர்களாவர்.

ஒவ்வொரு பள்ளியிலும் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, மறைத்திரு மறைமலையடிகள், பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை, பேராசிரியர் கா. நமச்சிவாய முதலியார் ஆகியோர் உருவப் படங்கள் தமிழ் மாணவர் களிடையே தமிழ் உணர்வு பெருகும்வண்ணம் அமைக்கப் பெறுதல் வேண்டும்.

ஆண்டுதோறும் பெரும் புலவர்களுடைய விழாக்களை நடத்தி அவற்றின் வாயிலாகத் தமிழ் இலக்கியங்களின் சுவையினைச் சிறப்பாக மாணவர்களிடமும் பொதுவாகத் தமிழ் மக்களிடமும் ஊட்டுதல் வேண்டும்.

சென்னைக்கு வரும் தமிழாசிரியன்மார் தங்கள் நண்பர்களுடன் இலிங்கிச் செட்டித் தெருவில் 105ஆம் எண்ணுடைய வள்ளலார் முதன்முதல் தமது 9 ஆவது அகவையில் பேசிய இல்லத்திலுள்ள 'மறைமலையடிகள் நூல்நிலைய'த்தையும் பல்லாவரத்தில் உள்ள மறைமலையடிகள் வாழ்ந்த 'கலைமன்ற'த்தையும் பார்த்து மகிழ்வார் களாக!

இன்னோரன்ன வகையில் செய்யும் உதவி தமிழ்மொழி வளர்ச்சிக்கும், தமிழின உணர்ச்சிக்கும், தமிழ்நாட்டு முன்னேற் றத்திற்கும் செய்யும் செய்தக்க பீடுடைய பெரும் பணியாகும். அச்சிடப்பெற்ற நூல்களும் அழிந்தொழிந்து போகாமல் கழகம் அவற்றை அச்சிட்டு வெளியிடுவதற்குச் செய்யும் உதவியும் ஆகும்.

# தாமரைத் திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்களின் மணி விழா

சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர், தாமரைத் திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்களின் மணி விழாப் பாராட்டுக் கூட்டம் கடந்த 7-5-72இல் சென்னைக் கோகலே மண்டபத்தில், சிலம்புச்செல்வர், தாமரைத் திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள் தலைமையில் மிகச் சீருஞ் சிறப்புமாக நடைபெற்றது. உயர் நீதி மன்ற நடுவர் பி. ஆர் கோகுலகிருட்டிணன் அவர்கள் விழாவினைத் துவக்கி வைத்தார். திரு. கா. ஏ. அருணசலம் அவர்கள் வரவேற்புரை வழங்கினர். ராஜா சர். முத்தையா செட்டியாரவர்கள் திரு. சுந்தரவடிவேலு அவர்கட்கு 'கல்வி நெறிக் காவலர்' என்னும் பட்டத்தை வழங்கிச் சிறப்பித்தார். மகாவித்துவான் மே. வி. வேணுகோபாலப் பிள்ளையவர்கள் பாமாலை சூட்டினர். பேராசிரியர் பலர் வாழ்த்துரை வழங்கினர்.



திரு. சுந்தரவடிவேலு அவர்கள் கல்வித்துறையில் ஏறக்குறைய முப்பது ஆண்டுகளாகப் பணியாற்றி வருகிருர்கள். இவர் சிறந்த சிந்தனையாளரும், எழுத்தாளரும், பேச்சாளரும் ஆவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் பல நூல்களை எழுதியுள்ளனர்.

1912ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 12ஆம் நாளில் காஞ்சியை அடுத்த நெய்யாடுபாக்கம் என்னும் சிற்றூரில் துரைசாமி, சாரதாம்பாள் ஆகியோரின் நன்மகனுகத் தோன்றினர். காஞ்சி ஆண்டர்சன் உயர்நிலைப்பள்ளியில் கல்வி கற்கத் தொடங்கிச் சென்னை மாநிலக் கல்லூரியில் எம். ஏ. தேறினர். பேராசிரியர் கா. நமச்சிவாய முதலியார், எஸ்.எஸ். அருணகிரி நாதர், மறைமலையடிகளார், அறிஞர் அண்ணு ஆகியோர் இவர் தம் தாய்மொழிப் பற்றுக்கும் இனப்பற்று நாட்டுப்பற்றுகட்கும் வித்திட்டவர்களாவர்.

கல்லூரிப் படிப்பு முடிந்தபின், டாக்டர் வரதராஜலு நாயுடு அவர்கள் நடத்தி வந்த 'தமிழ்நாடு' என்னும் நாளிதழில் சில காலம் துணையாசிரியராகப் பணியாற்றினர். பின்னர், ஊராட்சி அதிகாரியாகச் சிலகாலம் பணியாற்றினர். ஆனல், கல்வித்துறையிலேயே இவருக்கு நாட்டம் மிக்கிருந்தபடியால் அப்பணிகளை விட்டுவிலகி ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி

யில் சேர்ந்து படித்து எல். டி. பட்டம் பெற்றார். பின்னர் இள நிலைத் துணைக் கல்வி ஆய்வாளராகத் தமது கல்விப் பணியைத் துவக்கினார். அன்று முதல் கல்வித்துறையில் படிப்படியாகவும் பிறர் பாராட்டும் வகையிலும் உயர்வு பெறலானார்.

1942ஆம் ஆண்டு மாவட்டக் கல்வி யதிகாரியானார். அடுத்து, சென்னை மா நகராட்சிக் கல்வி அதிகாரியாகப் பொறுப் பேற்றார். அதனைத் தொடர்ந்து துவக்கக் கல்வி, பள்ளி உயர் நிலைக் கல்வி, கல்லூரிக் கல்வி ஆகிய மூன்று கல்விப் பிரிவு களின் துணை இயக்குநராகப் பணியாற்றினார்.

1954இல் தமிழகக் கல்வித்துறை இயக்குநராகப் பொறுப்பேற்றார். 1963 முதல் 1966 வரையில் கல்லூரிக் கல்வி, நூல் நிலையங்கள் ஆகிய துறைகளின் இயக்குநராகத் திறம்படப் பணியாற்றினார். 1961இல் குடியரசு நாளையொட்டித் திரு. சுந்தரவடிவேலு அவர்கட்கு, அவர்தம் கல்விப் பணி யினைப் பாராட்டி இந்திய அரசினர் 'பத்மஸ்ரீ' (தாமரைத் திரு) என்னும் பட்டத்தை வழங்கிச் சிறப்பித்தனர்.

பத்மஸ்ரீ பட்டம் பெற்ற திரு. சுந்தரவடிவேலு அவர்களைப் பாராட்டு முகத்தான் 6-2-61இல் மறைமலையடிகள் நூல் நிலையத்தில் உயர்நீதிமன்ற நடுவர் கணபதியா பிள்ளை அவர்கள் தலைமையில் பாராட்டு விழா நடத்தப்பெற்றது. கழக ஆட்சியாளர் அவர்கள் தம் வரவேற்புரையில் திரு. சுந்தரவடிவேலு அவர்களின் கல்விப் பணிகளைப் பெரிதும் பாராட்டிப் பேசினர்.

1966 முதல் 1968ஆம் ஆண்டு வரை நடுவண அரசின் கூட்டுக் கல்விக் கருத்துரை வழங்குநராகப் பணியாற்றி, அறிஞர் அண்ணா அவர்களின் ஆட்சிக்காலத்தில் தமிழக அரசின் தலைமைக் கல்விக் கருத்துரை வழங்குநரானார்.

இங்ஙனம் படிப்படியாகக் கல்வித்துறையில் உயர்வு பெற்ற இவர் 1969இல் கலைஞர் அவர்களின் ஆட்சியில் கல்வித்துறையின் சிறப்புமிக்க துணைவேந்தர் பதவியில் அமர்ந்தார். அன்று முதல் கல்வித்துறையிலும் அறிவு வளர்ச்சியிலும் இவர்கள் ஆற்றிவரும் தொண்டுகள் மிகப்பல.

இத்தகைய அறிஞர் மணிவிழாக் கொள்ளும் மாண்பின ராகத் திகழ்வது கண்டு மகிழ்கிறோம். திரு. சுந்தரவடிவேலு அவர்கள் நம் கழகத்திடம் பற்றுமிக உடையவர். கழகத்தின் தமிழ்ப்பணிகட்கு ஊக்கமளிப்பவர். இவர்கள் மேலும் பல்லாண்டு வாழ்ந்து கல்விப் பணியாற்ற எல்லாம் வல்ல இறைவன் அருள் புரியுமாறு எங்கள் உளமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

# மதிப்புரை

## திருச்செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணிய புஜங்கம்

(ஆதி சங்கரர் வடமொழியில் அருளியது)

[தமிழாக்கம் : கவியரசு, வித்துவான் கு. நடேச கவுண்டர்,
கோவை.

வெளியீடு : கோவை சிவனடியார் திருக்கூட்டத்தார்.
விலை 50 காசுகள்]

ஆதி சங்கரர் ஒரு காலத்தில் காச நோயால் துன்புற்று அஃது எம் முயற்சியாலும் நீக்கப்படாதிருந்தது. பின்னர் திருச்சீரலைவாயில் எழுந்தருளியிருக்கும் முருகப்பிரான்மீது "புஜங்கம்" என்ற தோத்திரப்பா பாடியதால் அது நீங்கிற்று. அதுவே இந்த ஸ்ரீ சுப்பிரமணிய புஜங்கம் என்னும் வடமொழிப் பிரபந்தமாகும். இதனைத் திரு. கு. நடேச கவுண்டர் அவர்கள் நல்ல தமிழில் மொழிபெயர்த்துள்ளார். மறைமலையடிகளாரும் இந்நூலினைப் பாராட்டியுள்ளார். இப்போது நான்காம் பதிப்பாக இந்நூல் வெளிவந்துள்ளது. பக்தர்கள் படித்துப் பயன் அடைவார்களாக.

## தைத் திங்கள்

[ஆசிரியர் : புலவர் சுந்தர சண்முகனார்.

வெளியீடு : புதுவைப் பைந்தமிழ்ப் பதிப்பகம்,
61-c, வைசியர் தெரு, புதுச்சேரி.
விலை ரூ. 3-00]

தமிழர் கொண்டாடும் விழாக்களுள் தைப் பொங்கல் தலைசிறந்தது; பொருள் பொதிந்த விழா. ஆனால் இவ்விழாவின் உட்பொருளையும் சிறப்பினையும் பலர் அறியார். இக்குறைபாட்டினை நீக்கத் தைத் திங்களின் சிறப்பு, தமிழர் பழக்க வழக்கங்களையும் தமிழ்நூல் ஆதாரங்களையும் அடிப்படையாக வைத்து இந்நூலின்கண் ஒருவாறு விளக்கப்பட்டுள்ளது. நூலாசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

## நீத்தார் யார்?

[ஆசிரியர் : புலவர் மு. தெய்வநாயகம்

வெளியீடு : மெய்ப்பொருள் பதிப்பகம், 2 ஏ, அப்பாத்துரை நாயக்கர் தெரு, சென்னை-23. விலை ரூ. 1-00

"தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு"

என்னுங் குறட்பாவிற்கு எடுத்துக்காட்டாக இருப்பது வள்ளுவரின் திருக்குறளே எனில் பொருந்தும். இத்தகைய திருக்குறள் சிந்தனையாளர்களைப் பலவகையில் சிந்திக்க வைத்து அவரவர் கொள்கை கோட்பாடுகட்கு ஏற்ப இடந்தந்து விரிந்து அவர்தம் அறிவை ஆட்கொள்ளும் தன்மை வாய்ந்தது. அவ்வகையில் இந்நூலாசிரியர் கிறித்துவக் கொள்கை அடிப்படையில் வள்ளுவரைக் காண்கிறார். இதற்குப் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் ஆற்றுப் படுத்துரையொன்று வழங்கியுள்ளார்.

# செய்திகளும் குறிப்புக்களும்

## தென்மொழிக் கொள்கைச் செயற்பாட்டு மாநாடு

தமிழன் தன் மொழியாலும் இனத்தாலும் விடுதலை பெற வேண்டும்; தமிழன் தன் நிலத்தாலும் விடுதலை பெறவேண்டும்.

இவ்விரு கொள்கைகளை அடிப்படையாக வைத்துக் கடலூர் 'தென்மொழி' ஆசிரியர் பெருஞ்சித்திரனார் ஓர் இயக்கத்தை நடத்தி வருகிறார். அவ்வியக்கத்தின் சார்பில் திருச்சி தேவர் மன்றத்தில் 10-6-72, 11-6-72 ஆகிய இரு நாட்களில் மாநாடொன்று நடைபெறும் என திரு. பெருஞ்சித்திரனார் அவர்கள் நீண்டதோர் அறிக்கையினையும், வேண்டுகோளையும் விடுத்துள்ளார்.

## டாக்டர் சாலை இளந்திரையன், சாலினி இளந்திரையன் தமிழக வருகை

தில்லிப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் சாலை இளந்திரையன் அவர்களும் அவர்தம் மனைவியார் சாலினி இளந்திரையன் அவர்களும் வழக்கம்போல் இவ்வாண்டிலும் மேத் திங்களில் தென்னகச் சுற்றுப்பயணத்தை மேற்கொண்டுள்ளனர். இவர்களின் சொற்பொழிவு கட்கு ஏற்பாடு செய்ய விரும்புவோர், கீழ்க்காணும் முகவரிக்கு எழுதித் தொடர்பு கொள்வார்களாக:

டாக்டர் சாலை இளந்திரையன்,<br>(3362/1), கிறிஸ்டியன் காலனி, புதுதில்லி-5.

## பார்வதி அம்மையார் மறைவு

1938ஆம் ஆண்டு இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் பங்கு கொண்டவரும், தமிழ் வளர்ச்சிக்காகத் தொண்டு புரிந்தவரும், திருவாளர் வல்லை பாலசுப்பிரமணியம் அவர்களின் உடன் பிறந்தவருமான திருவாட்டி பார்வதி அம்மையார் அவர்கள் 6-5-72இல் தாம்பரத்தையடுத்துள்ள இரும்புலியூரில் காலமானார்கள் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம். அவர் தம் குடும்பத்தார்க்கும் உற்றார் உறவினர்க்கும் நமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## நக்கீரர் கழகத் தமிழ்ப் பணிகள்

சென்னை நக்கீரர் கழகத் திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரியின் சார்பில் கா. நமச்சிவாய முதலியார் நினைவுச் சொற்பொழிவுகள் என்ற முறையில் பத்துத் தலைப்புக்களில் சொற்பொழிவுகள் ஏற்பாடு செய்யப் பெற்றன.

15-3-72இல் தாமரைத் திரு. சிலம்புச் செல்வர் ம. பொ. சி. அவர்கள் இத்தொடர்ச் சொற்பொழிவைத் துவக்கி வைத்தார்கள். அது காலை நக்கீரர் கழகத்தின் தமிழ்ப் பணியினைப் பாராட்டியதோடு கழகச் சார்பில் 23 பேராசிரியர்களுக்குப் புத்தாடை அணிவித்தும், இளவழகனார் எழுதிய 'திருக்குறள் அறம்' என்னும் ஆராய்ச்சி நூலினையும்,

தமிழகவரசு வெள்ளி விழா மலரினையும் வழங்கிச் சிறப்பித்தார்கள். தருமையாதினம் அளித்த 'தாயுமானவர்' என்ற நூலும் வழங்கப் பெற்றது.

'தாமரைச் செல்வர்' பட்டம் பெற்ற ம. பொ. சி. அவர்களைப் பாராட்டிச் 'சிவஞான போதம்', 'உலகத் தமிழ்' என்னும் நூல்களை தாமரைச் செல்வர் தி. க. சண்முகம் வழங்கினர். கழகச் சார்பில் தி. க. சண்முகம் அவர்கட்கு 'உலகத் தமிழ்' என்ற நூல் வழங்கப்பெற்றது.

திரு. வ. பா. கோபாலன், எம்.ஏ., பி.டி அவர்கள் சிறந்த ஆராய்ச்சிச் சொற்பொழிவு நிகழ்த்தினர். அன்னருக்கும் 'உலகத் தமிழ்' நூல் வழங்கப்பட்டது.

## International Journal of Dravidian Linguistics

திராவிடமொழிகள் பேசுவோர் இந்தியா, பாகிஸ் தான், ஆப்கானிஸ்தான், ஈரான் போன்ற பல நாடுகளில் வாழ்கின்றனர். அம்மொழிகள் பயில்வோர் இலங்கை, பர்மா, மலேசியா, சிங்கப்பூர், பிஜி போன்ற பல நாடு களில் குடியேறியுள்ளனர். அம்மொழிகளைப் பற்றிய கல்வியும் ஆராய்ச்சியும் இந்தியா, இலங்கை, மலேயா போன்ற நாடுகளில் மட்டுமன்றி ஐரோப்பா, அமெரிக்கா, ருசியா, இங்கிலாந்து போன்ற பல மேலை நாடுகளிலும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இந்நிலையில் பன்னாட்டுப் பேரறிஞர்களும் ஆராய்ச்சியாளர்களும் அம் மொழி யறிவில் நாட்டம் செலுத்துகின்றனர். அவ் வனைவருடைய ஆராய்ச்சிகளையும் வெளியிடும் நோக்கத்தோடு தொடங்கப் பெற்றுள்ள அரையாண்டு இதழ் இதுவாகும்.

கேரளப் பல்கலைக்கழக மொழியியல் பேரறிஞர் டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் அவர்கள்தாம் இவ் விதழின் பதிப்பாசிரியர்.

இதன் முதல் இதழ் இவ்வாண்டு சனவரித் திங்களில் வெளிவந்தது. இதில் எஸ். கே. சட்டர்ஜி, டி. பர்ரோ, வில்லியம் பிரைட், கமில் சுவலபில், லீ. லிஸ்கர், வி. ஐ. சுப்பிரமணியம் போன்ற பேரறிஞர்கள் பயனுள்ள ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதியுள்ளனர்.

இதன் ஆண்டு வரி ரூ. 25. இதழ் வேண்டுவோர் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்துக்கு எழுதுக.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ சுப்பையா.

# கழகப் புதிய வெளியீடுகள்

கோகிலாம்பாள் கடிதங்கள் (கழகப் புதிய பதிப்பு)

ஆசிரியர் : மறைமலையடிகளார்

பலதுறை அறிஞராகிய மறைமலையடிகளார் இயற்றியுள்ள இப்புதினத்தில் அவர்தம் கற்பனை ஆற்றலையும் எழுத்து நடைச் சிறப்பினையும் காணலாம். இப்புதினம் சாதிவேற்றுமைகளைச் சாடுகிறது—தமிழ் நூற்கல்வியின் இன்றியமையாமையினை எடுத்துரைக்கின்றது—காதலின் மாட்சியைக் கவினுறக் கூறுகிறது. அத்துடன் கடிதங்கள் வாயிலாகவே கதை இயம்பப்படும் முறை கற்றோர்க்கு இன்பம் பயப்பதாகும். நூலகங்கள்தோறும் இருக்கவேண்டிய சிறந்த புதின இலக்கியம்.

விலை ரூ. 8 75

சைவசித்தாந்த ஞானபோதம் (கழகப் புதிய பதிப்பு)

ஆசிரியர் : மறைமலையடிகளார்

இந்நூலின்கன் சைவசமயமாட்சி, இந்துசமய உண்மைகள், கடவுளின் அருளுருவம், சீவகாருணியம், உருவ வழிபாட்டின் உயர்வு, சிவலிங்க உண்மை, அம்பலவாணர் திருக்கூத்தின உண்மை ஆகிய அரிய கருத்துக்கள் அகப்புறச் சான்றுகளுடன் நன்கு விளக்கப்பட்டுள்ளன. சமய நிலையங்களிலும், நூலகங்களிலும் இருந்து அனைவர்க்கும் பயன்படவேண்டிய அரிய நூல்.

விலை ரூ. 7 00

தமிழ்ப் பேரறிஞர் பா. வே. மாணிக்க நாயக்கர்

ஆசிரியர் : என். கே வேலன், பி. ஏ.

தமிழ்ப் பேரறிஞரும், நுண் மாண் நுழைபுல மிக்க பொறியியல் வல்லுநரும், சிறந்த ஆராய்ச்சியாளரும், சமயப் பற்றுளரும், எப்பொருளிடத்தும் மெய்ப்பொருள் காணும் இயல்பினருமான பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்களின் வரலாறு இந்நூலின்கண் 15 தலைப்புக்களில் இனிய தமிழில் எழுதப்பட்டுள்ளது. மாணிக்க நாயக்கர் அவர்களின் மாண்பினை அறிய உதவும் சிறந்த வரலாற்று நூல். பள்ளி நூலகங்களிலும், பொது நூலகங்களிலும், வரலாற்றாசிரியர்களிடத்தும் இன்றியமையாது இருக்கவேண்டிய நூல்.

விலை ரூ. 3 00

பதிவு எண்: M. 4899



அப்பர் அச்சகம், சென்னை-1.